குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 38 ] காளயுக்தி ஆண்டு தைத்திங்கள் 10—2—79 [ இதழ் 3



பன்னிரு ஜோதிர்லிங்கத் தலங்களுள் ஒன்றாகிய

இராமேசுவரத்தில்

தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

ஸ்ரீ குருஞானசம்பந்தர்

அருள்வாக்கு

—★—

எக்காலம் தாகங்கள்
இற்றிடுமோ காயங்கள்
எக்காலம் ஆசைசினம்
இற்றிடுமோ — எக்காலம்
நல்லார் குணம்வருமோ
நாதாஎல் லாமுமாய்
அல்லானே சொக்கநா தா.

— சொக்கநாத வெண்பா-49

ஆசிரியர் :-

வித்துவான்
**இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள்**

துணையாசிரியர் :-

மகாவித்துவான்
**சி. அருணவடிவேல் முதலியார்**

உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

**தருமையாதீனத் திங்கள் இதழ்**

மலர் 38 || 10-2-79 || இதழ் 3

## உட்பொருள்


| எண் | | பக்கம் |
|---|---|---|
| 1 | மகாசிவராத்திரி ... | 97 |
| 2 | தருமை ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் வழங்கிய ஆசியுரை... | 101 |
| 3 | கடிதம் ... | 108 |
| 4 | கடவுளை எதிர்த்த எந்த ஆட்சியும் நீடிப்பதில்லை ... | 109 |
| 5 | அபிடேகப் பலன்கள்... | 111 |
| 6 | அன்னை அருள்மாலை ... | 112 |
| 7 | கும்பகோணத் தலச் சிறப்புக்கள் ... | 113 |
| 8 | வெள்ளத்தால் பாழான வேட்டுவக்கவுண்டர் கோயில் ... | 123 |
| 9 | வாழ்ந்திடுவீர்! ... | 127 |
| 10 | திருமந்திரமும், சிவஞானசித்தியாரும் | 129 |
| 11 | தெரிந்துகொள்ளுங்கள் | 135 |
| 12 | மதிப்புரை ... | 136 |
| 13 | செய்திகள் ... | 137 |
| 14 | எதிர்காலம் ... | 140 |
| 15 | பார்வையாளர் குறிப்பு | 126, 128 |




உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 38 | காளயுக்தி - தை - 10—2—79 | இதழ் 3

திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினுய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. —சம்பந்தர்

திருச்சிற்றம்பலம்

## மகாசிவராத்திரி

செங்க ணானும் பிரமனும் தம்முளே
எங்கும் தேடித் திரிந்தவர் காண்கிலார்
இங்குற் றேனென்று இலிங்கத்தே தோன்றினுன்
பொங்கு செஞ்சடைப் புண்ணிய மூர்த்தியே.

— இலிங்கபுராணத் திருக்குறுந்தொகை.

**விரதங்கள் :**

'அரிது அரிது மானிடராதல் அரிது' என்பார் ஔவையார். கிடைத்தற்கரிய மானிடப் பிறவியைப் பயன்கொண்டு வீடுபெறுவதே அறிவுடைமையாகும். கரும்பினைப்பெற்றும், அதன் சாற்றினைப் பயன்கொள்ளாது சக்கையை விரும்புவாரைப்போன்றதே, வீடுபேற்றுக்கு வாயிலான மானிடப்பிறவி உலக இன்பங்களைத் துய்ப்பதற்கே கிடைத்தது எனக்கருதுதல். ஐம்பொறிகள் இறைவன்வழங்கிய

அருங்கொடைகள். சூரிய கத்திபோன்றன அவை. பழம் நறுக்கவும் பயன்படும் ; பிறரைக் கொலைசெய்யவும் உதவும் ; அது கருவியின் குறை அன்று. அதனைப் பயன்கொள்வாரின் அறிவு, அறியாமை களைப் பொறுத்தது. பொறிவாயில் ஐந்தவித்தானின் - பொய்யற்ற ஒழுக்க நெறியில் - பொறிகளை அடக்கிநின்று பயணம்செய்பவரே வீடு பேற்றிற்கு உரியர் என்பார் திருவள்ளுவர். பொறிகளையும், அவற்றின் வாயிலாகத்தோன்றும்புலன்களையும் நெறிப்படுத்த, சமயங்கள் கண்டு தெளிந்த அரிய கருவிகளே விரதங்கள். உலகப் பெருஞ்சமயங்களுள் எல்லாம் தொன்மையும் பெருமையும் மிக்க நம் சைவ சமயம் வற்புறுத்தும் விரதங்கள் எல்லாம் விஞ்ஞான அடிப்படையிலும், மெய்ஞ்ஞான அடிப்படையிலும் உயர்நோக்குப்படைத்தன.

**சிவராத்திரி வரலாறு :**

உலகைப் படைப்பவன் பிரமன். உலகைக்காப்பவன் திருமால். திருமாலின் உந்தித்தாமரையில் தோன்றியவன் பிரமனாதலின் திருமாலைத் தந்தையாகவும் பிரமனைத் தனயனாகவும் கூறுதல் மரபு. தந்தை தனயர்களுக்குள் யார் பெரியர் என்ற கருத்து மாற்றம் எழுந்தது. அப்போது அவர்களுக்கு உண்மையுணர்த்தி அருள்பாலிப்பதற்குப் பெருமான் சோதிப் பிழம்பாகத் தோன்றினார். பிரமன் அன்னப்பறவையாய் திருமுடிதேடிப் பறந்தான், திருமால் பன்றியுருவாகிப் பூமியை அகழ்ந்துகொண்டு திருவடிதேடிச் சென்றார். எண்ணியசெயல் முடியாமையால் இருவரும் அயர்ந்தனர். அப்போது பெருமான் சோதியினின்றும் வெளிப்பட்டு அவர்களுக்கு அருள்புரிந்தார். 'சிட்டன் சேவடி சென்றெய்திக் காணிய, பட்ட கட்ட மூற்றார் அங்கு இருவரே' என்று, பிரமனும் திருமாலும் இறைவனது திருமுடியையும் திருவடியையும் தேடுதற்குப்பட்ட துன்பத்தை இலிங்கபுராணத் திருக்குறுந்தொகைப் பாடற்பகுதி அறிவிக்கிறது. இவ்வண்ணம் தோன்றிய வடிவமே இலிங்க வடிவம்; அதினின்றும் வெளிப்பட்டருளிய மூர்த்தமே இலிங்கோற்பவமூர்த்தம். பிரம விட்டுணுக்களுக்கு அருள்புரிந்தகாலம் மாசிமாதம் - தேய்பிறை - சதுர்த்தசி - நடு இரவு. அதுவே சிவராத்திரி எனப் போற்றப்பெறுகிறது.

உமாதேவியார் விளையாட்டாகச் சிவபெருமானது (சூரிய சந்திரர்களாகிய) இரண்டு திருக்கண்களையும் தம் திருக்கரத்தால் பொத்திய போது எங்கும் இருள்மூடின. அந்தக் கணநேரம் உலகத்திற்கு ஊழிக் காலமாயிற்று. அதனால் எல்லோரும் செயலிழந்தனர் ; அன்றாடம் செய்யவேண்டிய நித்தியகர்மங்களைச் செய்யமுடியாமல் ஒழிந்தனர். அந்தக்குற்றம்தீர குழந்தையின்நோய்க்குத் தாய் மருந்துண்பதுபோல

அம்மையாரே இரவு நான்கு யாமங்களிலும் சிவபெருமானைப்பூசித்து வழிபட்டார். வழிபாட்டுக்குகந்தபெருமான் ' வேண்டியது யாதென ' அம்மையார் இந்த இரவு தங்கள் பெயராலேயே சிவராத்திரி என்று வழங்கப்படவேண்டும்; சிவராத்திரியில் விதிப்படி சிவபூசை செய்வோர் தங்கள் திருவருளுக்கு உரியவர்களாக ஆகவேண்டும் ' என்று கேட்டுக்கொண்டார் என்ற வரலாறும் புராணத்தில் பேசப்படுகிறது.

சிவராத்திரியன்று இரவு பதினைந்துநாழிகைக்குமேல் இரண்டு நாழிகை உள்ள காலமே பெருமான் இலிங்கத்திருமேனிகொண்டருளிய காலமாகும். அன்று அறிந்தும் அறியாமலும் இறைவனைப் பூசித்த பலரும் பெற்ற பெரும் பேறுகளைப் புராணங்கள் பலவாக எடுத்துக் காட்டுகின்றன. சிவனுக்குமேல் தெய்வம் இல்லை; சித்திக்குமேல் நூல் இல்லை என்பர். அதுபோல் சிவராத்திரி விரதத்திற்குமேல் சிறந்தவிரதமும் இல்லை என்பதும் தெளிந்தோர் கொள்கை.

**விரதத்தால் விளைந்த பயன்**

வேடன் ஒருவன் வேட்டையாடக் கானகம் சென்றான். பகல் முழுதும் அலைந்து திரிந்தான். விலங்கு ஒன்றும் அகப்படவில்லை. களைப்புற்றான். இருள் நெருங்கியது. இன்று இரவை இங்கேயே கழித்து விடுவோம் என்று எண்ணினான். பக்கத்தில் ஒருகுளம். அதன் கரையில் உயர்ந்த வில்வமரம். அதன் கீழ் ஒரு சிவலிங்கம். இரவில் கொடிய விலங்குகள் உலாவுமென்ற அச்சத்தால் வில்வமரத்தில் ஏறினான். தூக்கம்வந்து கீழேவிழுந்துவிடாதிருக்க வேண்டுமே என்ற கவலை அவனுக்கு. அதனால் ஒவ்வொரு வில்வமாகப்பறித்துக் கீழே போட்டுக்கொண்டிருந்தான். விடியும்வரை அச்செயலை உறங்காது செய்தான். இரவுமுழுவதும் அவ் வில்வஇலைகள் சிவலிங்கத்தின்மீது விழுந்த வண்ணமாக இருந்தன. பொழுது புலர்ந்தது. கீழிறங்கி வீடு சென்று உணவுகொண்டான். அன்று சிவராத்திரிநாள். அவனறியாமலேயே உறங்காமை, உண்ணாமை, பூசனை இம்மூன்றும் நிகழ்ந்தன. அவன் இறுதிக்காலத்தில் யமபயமின்றிச் சிவலோகம் சேர்ந்தான். அவனது சிவராத்திரிச் செயல் இறைதிருவருளைப் பெறக் காரணமாக அமைந்தது.

சிந்தனையின்றிச் செய்த இந்த வினைகளுக்கு இத்தகைய இறையருள் கிட்டுமானால் நற்சிந்தனையோடு செய்யும் விரதத்தினால் எத்துணைப்பயன் கிடைக்கும்? எந்தச் செயலும் இறையருளால் நிகழ்வது ஆதலின் தெய்வசிந்தனையோடு விரதங்கள் யாவும் மேற்கொள்ளப்படுகின்றன.

**சிவராத்திரி வகை :**

நித்திய சிவராத்திரி, பட்சசிவராத்திரி, மாதசிவராத்திரி, யோக சிவராத்திரி, மகாசிவராத்திரி என ஐவகையாகக் கூறப்படுவன வற்றுள், மாசித்திங்கள் தேய்பிறை சதுர்த்தசி நடுஇரவு பெருமான் சிவலிங்க வடிவாய்த் தோன்றின காலமாதலின் அது மகாசிவராத்திரி என்று கூறப்படுகிறது. அத்திருநாளில் பெருமானைப்பூசித்து வழிபடும் முறை செந்தமிழ் நாட்டில் சிறப்பாக அமைந்துள்ளது.

**சிவராத்திரி விரதம் :**

சிவராத்திரி விரதத்தை அனுட்டிப்பது எப்படி? சிவராத்திரிநாளில் முதல் நாள் இரவு உணவு கொள்ளுதல் கூடாது. விடிந்ததும் சிவ ராத்திரி நாளில் நீராடி, நித்தியகருமங்கள் முடித்து, சிவாலயதரிசனம் செய்தல் வேண்டும். பின்னர் தேவார திருவாசகங்கள் போன்ற திரு முறைகளை ஓதுதல் வேண்டும். சிவபூஜை மேற்கொண்டிருப்பவர்கள் சிவராத்திரி இரவில் நான்கு யாமங்களிலும் சிவபூஜை செய்தல் வேண்டும். இரவில் உறக்கம் கொள்ளுதலும் கூடாது. சிவபூஜைமேற் கொள்ளாதவர்கள் அருகிலிருக்கும் சிவன் கோயில்களுக்குச்சென்று, நான்கு யாம சிவபூஜைகளிலும் தரிசனம் செய்யவேண்டும். மறுநாட் காலையில் நீராடி, நித்தியகருமங்கள் இயற்றியபின்னர், சிவனடியார் களுடன் கூடி உணவு கொள்ளலாம். மறுநாளும் பகலில் உறங்குதல் கூடாது.

**தீட்சைபெறுக !**

'தொட்டுக் காட்டாத வித்தை சுட்டுப்போட்டாலும் வராது' என்பர் ஆன்றோர். சைவப்பெருமக்கள் முறையாகத் திருக்கோயில் வழிபாடு - சிவநாம தோத்திரங்கள் முதலியன மேற்கொண்டு ஒழுகி னுலும், ஆசாரியமூர்த்திகளை அணுகித் தீட்சைபெற்று - அனுட்டானங் கள் இயற்றி, சிவலிங்கபூஜை மேற்கொண்டு சிறத்தலே இன்றியமை யாத பயன் நல்குவன. இவ்வாண்டு சிவராத்திரித்திருநாள் 25-2-79 ஞாயிற்றுக்கிழமையன்று வருகிறது. அந்நாள் தீட்சைபெறும் சிறந்த நாள். சைவ ஆதீன குருமகாசந்நிதானங்களையும் ஆசாரியப்பெரு மக்களையும் சைவஅன்பர்கள் அணுகி முறையாகத் தீட்சை பெற்று அனுட்டானம் முதலியன மேற்கொள்ள இச்சிவராத்திரி நாளைப் பயன்கொள்வது இன்றியமையாதது.

"மேன்மைகொள் சைவநீதி
விளங்குக உலகம் எல்லாம்"

---

உ

குருபாதம்

ஆனந்ததாண்டவபுரம்

அருள்மிகு பஞ்சவடீசுவரசுவாமி திருக்கோயில்

மகாகும்பாபிஷேக விழாவில்

25—2—79 அன்று

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

26-ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த

பரமாசாரிய சுவாமிகள்

வழங்கியருளிய

# ஆசியுரை

" உஞ்சேனை மாகாளம் ஊறல் ஓத்தூர்
உருத்திர கோடி மறைக்காட் டுள்ளும்
மஞ்சார் பொதியின்மலை தஞ்சை வழுவூர்
வீரட்டம் மாதானம் கேதாரத்தும்
வெஞ்சமாக் கூடல் மீயச்சூர் வைகா
வேதீச்சரம் விவீச்சரம் வெற்றியூரும்
கஞ்சனூர் கஞ்சாறு பஞ்சாக் கையும்
கயிலாய நாதனையே காணலாமே. "

**வைப்புத்தலம் :**

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகியோர் அருளிய தேவாரத் திருப்பதிகங்களைப் பெற்றுள்ள தலங்கள், பாடல்பெற்ற தலங்கள் என்று கூறப்படும். முழுமையான தேவாரத் திருப்பதிகங்களைப் பெருமல் தேவாரப்பாடல்களில் இடம் பெற்றுள்ள தலங்கள் 'வைப்புத் தலங்கள்' என வழங்கப்படும். ஆனந்ததாண்டவபுரம் என வழங்கும் இத்தலம் தேவாரத்தில் குறிப்பிடப்பெற்ற வைப்புத்தலமாக விளங்குவது. இவ்வூரின் பழம்பெயர் 'கஞ்சாறூர்.' திருநாவுக்கரசர் அருளிய க்ஷேத்திரக்கோவைத் திருத்தாண்டகத்தில் இத்தலம் குறிக்கப்பெற்றுள்ளது. முழுமையான தேவாரத் திருப்பதிகங்கள் இத்தலத்திற்கு இருந்து மறைந்துமிருக்கலாம்.

**நல்லோர் வாழும் ஊர் :**

இத்தலம் தேவாரத் திருப்பதிகத்துள் இடம்பெற்று வைப்புத் தலமாக விளங்குவதோடு. மானக்கஞ்சாற நாயனுர் திருவவதாரம் செய்த பெருமைக்குரியதாகவும் திகழ்கிறது. ஏயர்கோன் கலிக்காம நாயனுர் மானக்கஞ்சாறர் திருமகளாரை மணம்புரிந்துகொண்டு இவ் ஊருக்கு மாப்பிள்ளையாகவந்தபெருமையையும் இவ்வூர் பெற்றுள்ளது. இவ்வாறு பல்வகைச் சிறப்புக்களையும் பாங்குறப்பெற்ற இவ்வூரின் பழம்பெயராகிய கஞ்சாறூர் என்ற பெயர் இன்று வழக்கிலில்லை. ஆனந்தமகாமுனிவர்க்கு இறைவன் நடனதரிசனம் காட்டியருளிய காரணத்தால் இவ்வூர் ஆனந்ததாண்டவபுரம் என வழங்கப்பெறு கிறது.

இத்தலத்தின் வளமை, நல்லவர்கள் இங்கு வாழ்கிருர்கள் என்பதைக் காட்டுகிறது. ஒரு நாடோ ஊரோ நல்லவர்கள் அங்கு வாழ்வதனுலேயே வளம்பொருந்தியதாக இருக்கிறது என்பதைப் பாரதத்தில் வரும் ஒரு நிகழ்ச்சி உறுதிப்படுத்தும். பாரதத்தில் விராடபருவத்தில் பாண்டவர்கள் அஞ்ஞானவாசத்தின்போது அவர்கள் இருக்கும் இடத்தை அறிய முயல்கிருன் துரியோதனன். பாண்டவர்கள் இருக்குமிடத்தை எவ்வாறு கண்டுபிடிப்பது என்று கேட்கிருன். அதற்கு எந்த இடம் நல்ல மழை பொழிந்து செழுமை உடையதாக இருக்கிறதோ அங்கு பாண்டவர்கள் இருக்கிருர்கள் என்று அறிந்து கொள்ளலாம் என்று ஒருயுக்தி சொல்கிருர் பீஷ்மர். இந்நிகழ்ச்சி "எவ்வழிநல்லவர் ஆடவர் அவ்வழி நல்லை வாழிய நிலனே'' என்றபடி நல்லவர் வாழும் இடம் வளமை உடையதாக இருக்கும் என்ற கருத்தை நமக்குத் தெளிவுசெய்கிறது.

**பிறந்த ஊர் :**

'பெற்றதாயும் பிறந்த பொன்னுடும், நற்றவ வானினும் நனிசிறந் தனவே' என்பது பாரதியார் வாக்கு. ஒவ்வொருவருக்கும் தாங்கள் பிறந்த ஊர்ப்பற்று இருத்தல் அவசியம். பெற்றதாய் குழந்தையைப் பேணி வளர்ப்பதுபோலவே நாம்பிறந்த ஊரும் நாடும் நமக்கு உணவு தந்து காக்கிறது. அதனுல்தான் அகத்திலும் புறத்திலும் நம்மைக் காக்கும் தாயையும் நாட்டையும் இணைத்து, பெற்றதாயும் தாய்க்குச் சமமாக ஏன்? ஒருபடி கூடுதலாகவே பிறந்த பொன்னுடும் நற்றவ வானினும் நனிசிறந்தனவே என்று கூறுகிருர் பாரதியார். இவ்வூரில் பிறந்த அன்பர்கள் இவ்வூரில் உள்ள கோயிலைப் பாதுகாப்பது முக்கிய மான கடமையாகும். இவ்வூர் அன்பர்கள் தாங்கள் பிறந்த ஊரில் விளங்கும் திருக்கோயில் திருப்பணிகளுக்கு வேண்டும் உதவிகள் அளித்துள்ளமை பாராட்டத்தக்கதாகும்.

இன்று இத்தலத்தின் சிறப்புக்களுக்கெல்லாம் காரணமாக விளங்கும் நாயன்மார்களின் தொண்டையும் பக்தி உணர்வையும் சிந்திப்பது நமது தலையாய கடமையாகும்.

**ஏயர்கோன்கலிக்காமர் :**

இவர் மானக்கஞ்சாற நாயனரின் மாப்பிள்ளையாவர். சோழமன்னரின் சேனுபதியாக விளங்கியவர். இவரது ஊர் புள்ளிருக்குவேளூருக்கு மேற்கே விளங்கும் திருப்புன்கூருக்கருகிலுள்ள பெருமங்கலமாகும். இவர் ஏயர்கோன்குடியில் தோன்றியவர். சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு நண்பர். சுந்தரரோடு இவர் நட்புக்கொண்ட நிகழ்ச்சி குறிப்பிடத்தக்க சிறப்புடையதாகும்.

கலிக்காமர் சிவபக்தியிலும் சிவனடியார் பக்தியிலும் சிறந்து விளங்கியவர். இவர் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்தவராகிய சுந்தரர் சிவபெருமானைப் பரவையார்பால் தூதனுப்பிய செய்தி கேட்டு, அவர் மீது இவர் சினம் கொண்டார். அதனைக் கேள்வியுற்ற சுந்தரர் தம் பிழையை உணர்ந்து ஆரூர் இறைவனைப் போற்றி, கலிக்காமரின் செற்றத்தைத் தீர்த்தருள வேண்டினர். சிவபிரான் அவ்விருவரையும் நண்பராக்கத் திருவுளம்கொண்டு கலிக்காமருக்குச் சூலைநோயை அருளி, சுந்தரர்தீர்த்தாலொழியத் தீராது என்றருளினர். கலிக்காமர் சுந்தரரால் நோய் தீர்வதைக்காட்டிலும் அந்நோய் தீராதிருத்தலே நன்றென்றிருந்தார். இறைவன் சுந்தரர் கனவில் கலிக்காமரின் சூலை நோயைச் சென்று தீர்க்குமாறு பணித்தார். சுந்தரர் நோய்தீர்க்க வருவதையறிந்த கலிக்காமர் அவரைக் காணவும் விரும்பாமல் உடைவாளால் வயிற்றைக் கிழித்துக்கொண்டு உயிர்துறந்தார். கலிக்காமர் இறந்தபின் தாமும் உயிர்விடத் துணிந்தார் அவர்தம் மனைவியார். அதற்குள் சுந்தரர் கலிக்காமரின் வீட்டிற்கு வந்துவிட்டார். கணவர் இறந்ததையும் மறைத்துச் சுந்தரரை வரவேற்றார் அவர்தம் அருமை மனைவியார். உடனிருந்தவர்கள் சொல்லக்கேட்டு ஏயர்கோன்கலிக்காமரைச் சென்று கண்ட சுந்தரர், அவர் உடைவாளால் தம்முயிரை மாய்த்துக்கொண்டு உயிர்துறந்ததை அறிந்து மனம் வருந்தினர். யானும் இவர்போலவே இறந்தொழிவேன் என்று உடைவாளைப் பற்றினர். உடனே இறைவர் அருளால் கலிக்காமர் உயிர்பெற்று எழுந்து சுந்தரர் கையிலுள்ள வாளைப்பற்றி அவரைத்தடுத்து நிறுத்தினர். ஆரூரர் அவரை வீழ்ந்து வணங்கினர். கலிக்காமரும் வணங்கினர். இருவரும் ஒருவரையொருவர் தழுவிப் பிரியா நண்பர்களாயினர். இருவரும் திருப்புன் கூர்சென்று சிவலோகநாதன் சேவடியை வணங்கி மகிழ்ந்தனர் என்பது ஏயர்கோன்கலிக்காமரின் வரலாறு.

சுந்தரர் இறைவனைத் தூதராகப் பணிகொண்டது பொருந்துமா என்ற கேள்விக்கு ஏயர்கோன்கலிக்காமர் வரலாறு விடைதருகிறது. இறைவன் தாமே வலியவந்து தம்மைத் தோழராகத்தந்தும், தூதாகச் சென்றும் சுந்தரருக்கு உதவுகின்றார். எனவே இது பிழையில்லை என்பதை இந்நிகழ்ச்சியாலும் ஏயர்கோனுக்கு உணர்த்துகின்றார். சுந்தரரோ அவ்வாறு பணிகொண்டது பிழைதான் என்பதை உணர்ந்து இறைவனைப் பிழைபொறுக்குமாறு வேண்டிப் பணிகின்றார் என்பது இவ்வரலாற்றில்வரும் முக்கிய நிகழ்ச்சிகளாகும்.

**மானக்கஞ்சாறர் :**

இவ்வூரில் அவதரித்த பெருஞ்சிறப்புக்குரியவர் மானக்கஞ்சாற நாயனார். பெருமை பொருந்திய கஞ்சாறு என்னும் ஊரில் தோன்றியவர் என்பது இப்பெயரின் பொருள். இவரது இயற்பெயர் தெரியவில்லை. பெருஞ்செல்வராக விளங்கிய இவர் சிவனடியார்களுக்கு வேண்டுவன அளிக்கும் திருத்தொண்டு புரிந்து வாழ்ந்துவந்தார். இவருக்கு இறைவனருளால் ஒரு பெண்மகவு பிறந்தது. மானக்கஞ்சாறரின் பெண் வளர்ந்து மணப்பருவம் எய்தினார். பெரியவர்கள், ஏயர்கோன்கலிக்காமருக்கு அப்பெண்ணை மணம்பேசி நிச்சயித்திருந்தனர். திருமணநாளன்று மானக்கஞ்சாறரின் அடியார் பக்தியை உலகிற்குப் புலப்படுத்தத் திருவுளங்கொண்ட இறைவன் மாவிரத வேடமுடைய அடியவராக மானக்கஞ்சாறர் இல்லத்திற்கு எழுந்தருளினார். மாவிரதம் என்பது அகப்புறச் சமயங்கள் ஆறனுள் ஒன்றாகும்.

மானக் கஞ்சாறர் வணங்கி அவரை வரவேற்றார். வந்த அடியவர் இங்கு நிகழும் அற்புதச் செயல் யாது எனக் கேட்டார். மானக்கஞ்சாறர், அடியேன் பெற்ற மகளது திருமணம் என்றார். மங்கலம் உண்டாகுக என்றுவாழ்த்தினார் மாவிரதியார். கஞ்சாறர்மணக்கோலம் கொண்டிருந்த மகளை அழைத்து வந்து சிவனடியாரை வணங்கச் செய்தார். அடியவர் மஞ்சு தழைத்திருந்ததெனத் தழைத்திருந்த மணமகளின் கூந்தலைக் கண்டு இவள் கூந்தல் நமக்குப் பஞ்சவடிக்கு ஆகும் என்றார். பஞ்சவடி என்பது மாவிரதிகள் மார்பில் அணியும் மயிர்ப்பூணூல்.

அதுகேட்ட மானக் கஞ்சாறர் உடனே தம்மகள் கூந்தலை உடைவாளால் அடியோடு அரிந்து அடியவரிடம் கொடுத்தார். அடியவராக வந்த இறைவன் அதனை வாங்குபவர்போலக் காட்டி மறைந்து விசும்பில் உமையம்மையாருடன் விடைமீது காட்சி கொடுத்தருளி நாயனாரைப் பார்த்து இச்செயல் உமது புகழை உலகமறியச் செய்துவிட்டது என்று அருள் புரிந்து மறைந்தார்.

அங்கு வந்த ஏயர்கோன்கலிக்காமர் இவ்வியப்புடைய காட்சியைக் காணவில்லையேயென்று மனம் வருந்தினர். இறைவனருளால் மணமகளின் மலர்புனைந்த கூந்தல் வளர்ந்தது. கலிக்காமருக்கும் மானக்கஞ்சாறர் திருமகளுக்கும் திருமணம் இனிதாக நிகழ்ந்தது. இவ்வரலாறு இத்தலத்திற்குப் பெருமை தேடித்தரும் வரலாருகும். இத்தலத்தில் விளங்கும் இறைவன் அடியவராகவந்து மானக்கஞ்சாறர் மகளின் கூந்தலைப் பஞ்சவடியாகக் கேட்டகாரணத்தினல் பஞ்சவடீசுவரர் என வழங்கப்பெறுகிருர். இக்கோயிலில் மாவிரதியராகவந்த இறைவன் திருவுருவம் சேக்கிழார் பெரியபுராணத்தில் கூறும் உருவ வருணனைகளோடு விளங்குகிறது. மானக்கஞ்சாறரின் மகள்பெயர் பெரியபுராணத்தில் கூறப்படவில்லை. இத்தலத்தில் புண்ணியவர்த்தனி என்று வழங்கப்படுகிறது.

**கற்பின் சிறப்பு :**

மானக்கஞ்சாற நாயனுர் புராணத்தில் அவர்தம் மனைவியாரின் கற்புமேம்பாட்டையும் அவர்மகள் பெற்ருேர்க்குச் செய்யும் பேருதவியைக் குறித்தும் சேக்கிழார் அருளியுள்ள பெரியபுராணப் பாடல் சிந்தித்து மகிழ்தற்குரிய பாடலாகும்.

குழைக்கலையும் வடிகாதில் கூத்தனுர் அருளாலே
மழைக்குதவும் பெருங்கற்பின் மனைக்கிழத்தி யார்தம்பால்
இழைக்கும்வினைப் பயன்சூழ்ந்த இப்பிறவிக் கொடுஞ்சூழல்
பிழைக்கும்நெறி தமக்குதவப் பெண்கொடியைப் பெற்றெடுத்தார்.

என்பதுதான் அப்பாடல். இப்பாடலில் மானக்கஞ்சாறரின் மனைவியாரது கற்பின் சிறப்பை, "மழைக்குதவு பெருங்கற்பின் மனைக்கிழத்தியார்" என்று சேக்கிழார் பாராட்டி உரைக்கும் சொற்ருெடரும் அந்நாயனுரின் மகளை 'பிறவிக்கொடுஞ்சூழல் பிழைக்கும்நெறி தமக்கு உதவும் பெண்கொடி' என்று போற்றி உரைக்கும் சொற்ருெடரும் பொருட்சிறப்புடையதாகும். உலக வளர்ச்சிக்குப் பெய்யும் மும்மாரிகளில் ஒருமழை கற்புநெறிதவருத பெண்களால் உண்டாகிறது. இதனை விவேக சிந்தாமணியும்,

வேதம் ஓதும் வேதியர்க்கு ஓர்மழை
நீதி மன்னர் நெறியினுக்கு ஓர்மழை
மாதர் கற்புடை மங்கையர்க்கு ஓர்மழை
மாதம் மூன்று மழையெனப் பெய்யுமே.

என்று கூறுகிறது. பெண்களின் கற்பை நெருப்புக்குச் சமமாகக் கூறுவர். கண்ணகியின் கற்புக்கனல் மதுரைமாநகரை எரித்ததைச்

சிலப்பதிகாரம் காட்டுகிறது. பெரியபுராணத்தில் திருநீலநக்க நாயனுர் வரலாற்றில் சேக்கிழார் திருச்சாத்தமங்கையில் வாழும் அந்தணர்கள் இல்லங்களில் அந்தணர்கள் வேட்கும் ஆகவனீயம் காருகபத்தியம் தஷிணுக்கினி என்ற முத்தீயோடு, பெண்கள் பேணிவளர்க்கும் கற்புக் கனலும் சேர்ந்து நால்வகைத் தீ வளர்க்கப்படுகிறது என்று கூறுகிருர். கற்புநெறி தவருது மனையறம்பேணும் பெண்களே குடும்பத்திற்கு வேர்போல விளங்குபவர்கள். சிறுத்தொண்ட நாயனுரின் மனைவி திருவெண்காட்டு நங்கையாரை 'மனையறத்தின் வேராகி விளங்கும் திருவெண்காட்டு நங்கை' எனப் போற்றியுரைக்கிருர் சேக்கிழார்.

நம் ஆதிபரமாசாரிய மூர்த்திகளாகிய குருஞானசம்பந்தர் மழை பெய்வதற்குரிய காரணங்கள் நான்கை எதிர்மறை முகத்தால் கூறுகின்ருர்கள். நீதியில்லா மன்னர்களின் நாடும், விபூதி அணியாதவர் செய்தவமும், சிவபெருமானின் திருவடிகளை உணராத ஆசாரியனும், கற்புநெறிநில்லாத மகளிரும் நாடு வளமிழப்பதற்குக் காரணங்களாவர் என்று கருதுகின்ருர். இது,

நீதியிலா மன்னர் இராச்சியமும் நெற்றியிலே
பூதியிலார் செய்தவமும் பூரணமாம் — சோதி
கழலறியா ஆசானும் கற்பிலரும் சுத்த
விழலெனவே நீத்து விடு.

எனவரும் பாடலால் தெளிவாகிறது.

குருஞானசம்பந்தர் மிகச் சிறந்த அனுபூதிமான். அவர்கள் உலகிற்கு வழங்கிய உபதேசமொழிகள் நம்மனத்திற்கு நல்லதெளிவை உண்டாக்க வல்லன. அவர்கள் அருளிய சிவபோகசாரத்தில் ஒருபாடலையும் சொக்கநாத வெண்பாவில் ஒருபாடலையும் உங்கள் சிந்தனைக்குக் கொண்டு வருகிருேம்.

உலகில் பிறந்த மக்கள் அனைவரும் ஒரே நிலையினராக இல்லை. சிலர் செல்வர்களாகவும் சிலர் ஏழைகளாகவும் சிலர் அறிவாளிகளாகவும் சிலர் மூடர்களாவும் சிலர் நோயற்றவர்களாகவும் சிலர் நோயாளிகளாகவும் இருக்கிருர்கள். இவைபோலவே எல்லாவகையிலும் ஏற்றத்தாழ்வுடையராயிருத்தற்கு யாதுகாரணம் என்று எல்லோரும் சிந்திக்கத்தான் செய்வர். இதற்குத் தெளிவான விடையைக் குருஞானசம்பந்தர் அருளியிருக்கிருர்.

அவரவர் வினைவழி அவரவர் வந்தனர்
அவரவர் வினைவழி அவரவர் அனுபவம்
எவரெவர்க் குதவினர் எவரெவர்க் குதவிலர்
தவரவர் நினைவது தமை உணர்வதுவே.

இத்திருப்பாடலில் ஸ்ரீ குருஞானசம்பந்தர் இவ்வுலக வாழ்க்கையில் மக்கள் அடையும் இன்பத் துன்பங்களும் பிற ஏற்றத் தாழ்வுகளும் அவரவர் செய்த வினைப்பயன்களால் விளைகிறது என்ற கருத்தைத் தெரிவித்தருளுகின்றார். வினை என்பது அவரவர் செய்யும் செயலே யாகும்.

ஒவ்வொருவரும் அவரவர் செய்த வினைப்பயன்களின் வழியே இவ்வுலகில் பிறந்து இன்பத்துன்பங்களை அனுபவிக்கின்றனர். நமக்கு வரும் நன்மை தீமைகள் அனைத்தும் நாம் முன்பிறவிகளில்செய்த பழவினைகளாலேயே விளைகின்றன என்பதை இப்பாடல் தெரிவிக்கின்றது.

**சொக்கநாத வெண்பா :**

இறைவன் அவரவர் செய்த வினைப்பயன்களுக்குத் தக்கவாறு இன்பதுன்பங்களை உரிய காலங்களில் உயிர்கட்கு ஊட்டுகின்றான் என்பதைச் சொக்கநாத வெண்பாவிலும் கூறியருளுகின்றார் குருஞான சம்பந்தர்.

இன்னவினை இன்னதலத்து இன்னபொழுது இன்னபடி
இன்னதனால் எய்தும் எனஅறிந்தே — அன்னவினை
அன்னதலத்து அன்னபொழுது அன்னபடி அன்னதனால்
பின்னமறக் கூட்டும் பிரான்.

இறைவன் வினைப்பயன்களை உயிர்கட்கு இன்ன இடத்தில் இன்னகாலத்தில் இம்முறையில் இதனால் விளைவிக்கலாம் என்பதை அறிந்து, அதில் சிறிதும் பிழையாதபடிக் கூட்டுவிப்பான் என்பது இப்பாடலின் பொருள். இவ்வுலகம் இறைவன் திருவருளாலேயே இயங்குகிறது. அவனன்றி ஓரணுவும் அசையாது. இறைவன் எவ்வளவு நல்லவர்களாயிருந்தாலும் கெட்டவர்களாயிருந்தாலும் கெடுங்காலம் வந்தால் அவர்களைக் கெடுப்பான். நற்கதிகளில் விடுங் காலம் வந்தால் அவர்களை உய்விப்பான் என்பன போன்ற கருத்துக் களையும் சொக்கநாத வெண்பாவில் குருஞானசம்பந்தர் கூறியருள் கின்றார். கெடுப்பதும் எடுப்பதும் அவரவர் வினைக்கு ஏற்ப அவரவர் நன்மைக்காகவே நடுநிலை நின்று நிகழ்த்திவைக்கின்றான் இறைவன்.

இத்தகைய அரிய உண்மைகளைக் கற்பிக்கும் நூல்கள் பலவற்றை மக்கள் படித்து உணரவேண்டும்.

கும்பாபிடேகம் திருக்கோயில் பணிகளில் சிறப்புடையது. இவ்வூர்க் கோயிலைத் திருப்பணிகள் செய்து கும்பாபிடேகம் செய்வதால் ஊர் சுபிக்ஷம் அடையும், இவ்வூர்மக்கள் நன்மைகள் பலவற்றை அடைவர். இவ்வூர்த் திருக்கோயில் மகாகும்பாபிடேக புண்ணியப் பணியில் ஈடுபட்டுள்ள அனைவரையும் பாராட்டுகிறோம். செந்தமிழ்ச் சொக்கன் திருவருளால் எல்லா நலன்களும் உண்டாக வாழ்த்துகிறோம்.

வாழிய திருப்பணி !

வளர்க நல்லறங்கள் !!

---

**கடிதம்**

* * தாயுமானவர் விளக்கவுரையை 2, 3 தினங்கள் திருச்சி வானொலியில் காலை 7-25 முதல் 7-30 வரை கேட்டுப் பேரானந்தம் அடைந்தேன். நிறைந்த கருத்தாழமும், பொருட்செறிவும் செவிக்குணவாக இருந்தது. கல்வியின் பயன், கல்விக்குத்தந்த விளக்கம் என்நெஞ்சைவிட்டு என்றும் நீங்காது. தத்துவ உரை தங்கட்கே உரிய தனிச் சிறப்பு. மேலும் இதுபோன்று தொடர்ந்து அருளாசி அருளப் பணிவன்போடு வேண்டுகின்றேன். "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" எனத் தாயுமானவரிடத்து—அவர் நூலிடத்துக் கொண்ட புலமை கற்றோர்க்குப் பெருவிருந்தாக அமைந்தது. * *

சிக்கல், **புலவர். சி. சானகிராமன்,**



* * மகாசந்நிதானம் அவர்கள் இன்று காலை வானொலிமூலம் அருளுரையாற்றியது கேட்டு மிகவும் மகிழ்ச்சியடைந்தேன். ஜீவகாருண்யம், தாயுமான சுவாமிகள் பாடலுக்கு விளக்கவுரை, எறும்பு தின்றால் கண்தெரியும், மாக்கோலம் போடுவதன் விளக்கம் இவையனைத்தும் மிக அருமையாக இருந்தது. * *

பவானி, **மு. கண்ணப்பன்.**

# கடவுளை எதிர்த்த
# எந்த ஆட்சியும் நீடிப்பதில்லை

திரு. கிருபானந்த வாரியார்

கடவுளை எதிர்த்த எந்த ஆட்சியும் நீடிப்பதில்லை. யார் ஆட்சிக்குவந்தாலும் கோவில்களில் கைவைக்காதே என்பதற்கான படிப்பினை அது.

எதிலும் அதிக ஆராய்ச்சி கூடாது. ஓரளவு பதத்துணர்ந்து செயல்படுவதுதான் விவேகமானது. எல்லாப் பழவகைகளும் நிறைந்த கனி குலுங்கும் சோலை. வெடித்து இருக்கும் வேர்ப்பலா. பழுத்துக் கனிந்துநிற்கும் வாழை. தென்னை இளநீர்கள். கொய்யாக் கனிகள். ஆரஞ்சுப்பழங்கள், எல்லாப்பழங்களும் கனிந்து குலுங்கின. அதில் ராமு, சோமு என்ற இருவர் பசித்திருந்தவர் சென்றனர். தோட்டத்திற்குள் சென்று ஒரு மணி நேரத்திற்குள் திரும்பி வரவேண்டும் என்பது நிபந்தனை. ராமு போனவுடன் பசிதீரப் பழம்தின்றான். சோமு ஆராய்ச்சியில் இறங்கினான். ஒருமரத்துக்கும் இன்னொருமரத்துக்கும் எவ்வளவு இடைவெளி, எத்தனைகிளை அமைப்பு, பழ எண்ணிக்கை, மண்வளம், எல்லாவற்றையும் ஆராய்ச்சி செய்தபோது ஒருமணி நேரம் ஓடிவிட்டது. பசி அடங்காமல் திரும்பினான். ஆராய்ச்சி செய்பவனைவிட அனுபவசாலி உயர்ந்தவன். ஆகவே ஆராய்ச்சி அளவுக் கதிகமாகவே இருக்கக்கூடாது.

**மாறுதல் :**

அதிகக் குளிர்ச்சி அடையும்போது ஐஸ்கட்டியாக மாறுவதுபோல் உருவமில்லா இறைவன் கருணையால் மக்களின் நன்மைக்காக உருவம் கொள்ளுகிறான். அப்படித்தான் யாகசாலையில் 5 காலம் அல்லது 7 காலம் பூஜை செய்து அந்தச் சக்தியை, பிம்பத்துக்கு ஏற்றுகிறார்கள். வெறும் வெள்ளைக் காகிதம் நோட்டு அடிக்கும் "நாசிக்"குக்குப் போகும்போது வெறும் வெள்ளைப்பேப்பராகப்போகிறது. திரும்பவரும் போது பணமதிப்புடன் வருகிறது. அதேபோல் சிவாலய மந்திரங்கள் கல்லைக் கடவுளாக்குகிறது. தற்போது பெரியகோவிலைக்கட்டிய ராஜ ராஜசோழன் இல்லை. ஆனால் அவன் கட்டிய கோவில் உள்ளது. ஒரு விஞ்ஞானி இரும்பைப்பார்த்தான். "மை"க்காக மாற்றினான். தொழிலாளி மண்ணைப்பார்த்தான். பாத்திரமாக மாற்றினான். மரத்தை இசைக்கருவியாக மாற்றினான். அப்படித்தான் கல் கடவுளாக மாறுகிறது சிவாலய மந்திரங்கள் மூலமாக.

**பெண்ணின் பெருமை :**

ஒருவன் மதுபானம் செய்தால் மன்னிக்கலாம். பொய் சொன்னால் மன்னிக்கலாம். கொலைக் குற்றத்தைக்கூட மன்னித்துவிடலாம். எதை மன்னிக்க முடியாது தெரியுமா? ஒருபெண் பதினெட்டுவருடம் ஒருவீட்டில் வாழ்ந்து, தகப்பனார், தாய், தங்கை, அண்ணன், தம்பி இவ்வளவுபேருடன் வாழ்ந்திருந்து, தன்னுடைய திருமணத்துக்கு மறுநாளே கணவன் வீடுதான் தன்வீடு என்று சொல்லுகிறாளே. அங்கு முகமறியாத மாமனார், மாமியார், நாத்தனார்கள், மைத்துனர்கள் இவர்களுடன் ஒட்டிவாழ வந்திருக்கும் அந்தப்பெண்ணுக்குத் துரோகம் செய்தால் அக்கணவனை ஒருபோதும் மன்னிக்கமுடியாது. அப்படிப்பட்ட எல்லாத் தியாகங்களையும் செய்துவரும் மனைவிகளைக் கணவன்மார்கள் நன்றாகப் போற்றிப் பாதுகாக்கவேண்டும்.

ஒருபெண் சகோதரியாக, அக்காவாக, தங்கையாக, மனைவியாக, தாயாராக இருக்கலாம். இந்த நிலைகளில் எந்தஸ்தானம் உயர்ந்தது தெரியுமா? மனைவிஸ்தானம்தான் உயர்ந்தது. ஏனெனில் மனைவியானால்தான் தாயாக முடியும். ஆகவே பெண் பிறவிகளிலேயே ஒருபெண் மனைவியாவதும், தாயாராவதும்தான் உயர்ந்தநிலை. அந்த உயர்ந்தநிலைகளில் உள்ளவர்களைப் போற்றிப் பாதுகாப்பது ஒவ்வொரு மனிதனின் கடமையாகும்.

நன்றி. — தினமலர், 12—2—79

---

## அட்டைப்பட விளக்கம்

இறைவன் சோதிவடிவாய்த் தோன்றிக் காட்சியளித்த காலம் மகாசிவராத்திரியாகும். அதனால் சோதிலிங்கத் திருத்தலங்களில் சிவராத்திரி சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. சோமநாதம், ஸ்ரீசைலம், உஜ்ஜைனி, ஓங்காரம், வைத்தியநாதம், பீமசங்கரம், இராமேசுவரம், நாகேசம், வாரணசி (காசி), திரியம்பகம், கேதாரம், குஸ்மேசம் என்பன பன்னிரு சோதிர்லிங்கத் தலங்களாகும்.

இராமபிரான் வழிபட்டு அருள்பெற்ற திருத்தலம் இராமேசுவரம். மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூன்றாலும் சிறப்புற்ற தலங்களை வழிபட விரும்புவோர் வடக்கில் ஸ்ரீகாசி (வாரணசி) யையும், தெற்கில் இராமேசுவரத்தையும் முக்கியமான வழிபாட்டுத் தலங்களாகக் கொள்வர். இவ்வாண்டு 25—2—79 ஞாயிற்றுக்கிழமையன்று நிகழும் மகாசிவராத்திரியை முன்னிட்டு இராமபிரான் இராமநாதரைப் பூஜை செய்யும் காட்சி அட்டையை அழகுசெய்கிறது.

# அபிடேகப் பலன்கள்

( தொகுப்பு : இரா. செ. )

சிவபெருமானுக்கும், ஏனைய மூர்த்திகளுக்கும் நிகழ்த்தப் பெறும் அபிடேகங்களால்வரும் இம்மை - மறுமைப் பயன்கள் மிகப் பலவாகும். முன்னோர்கள் அனுபவபூர்வமாகக் கண்டு தெளிந்த அபிடேகப் பலன்களைக் கீழே காணலாம்.

1. பால் — நீண்ட ஆயுள் அமையும்.
2. தயிர் — நன்மக்கட்பேறு வாய்க்கும்.
3. நெய் — வீடுபேறு நல்கும்.
4. தேன் — குரல் இனிமை உண்டாக்கும்.
5. பஞ்சாமிர்தம் — உடல்வலிமை தரும்.
6. இளநீர் — போகம் வழங்கும்.
7. எலுமிச்சம்பழம் — பகையை அழிக்கும்.
8. கரும்பின்சாறு — நோய் நீக்கும்.
9. திருமஞ்சனப்பொடி — கடன், நோய் தீர்க்கும்.
10. சந்தனத்தைலம் — சுகம் தரும்.
11. விபூதி — போகம், மோட்சம் நல்கும்.
12. பன்னீர்கலந்த சந்தனக் குழம்பு — திருமகள் கடாட்சம் உண்டாகும்.
13. சொர்ணபிஷேகம் —வியாபாரலாபம் தரும்.
14. வலம்புரிச்சங்கம் கலசாபிடேகம் — தீவினை நீங்கி நல்வினை நல்கும். நினைத்தவை நடக்கும்.

நன்றி : திருப்பூர் குன்றுதோருடல் கூட்டு வழிபாட்டுக்குழு.



# அன்னை அருள்மாலை

திருமுறைக் கலாநிதி

வேலூர், திரு. க. சொக்கலிங்க ஓதுவார்.

மலர்கொண்டு வழிபடும் பள்ளியின் முக்கூடல்
   மைம்மேவு கண்ணியம்மை
மழுவாரு மங்கையான் மகிழ்திரு வாரூர்
   மாதல் லியங்கோதையே
நிலவணியும் நிமலனுறை ஆரூர் அறநெறி
   நிகரில்வண் டார்குழலியே
நேசமுறும் ஆரூர்ப் பரவையுள் மண்டளி
   நிதம்தொழுபஞ் சின்மெல்லடி
நலமருளும் திருவிளமர் யாழின்மென் மொழியம்மை
   நாதனுறை கரவீரமே
நண்ணிடும் பிரத்யக்ஷ மின்னம்மை பெருவேளூர்
   நல்லமின் னனையாள(ம்)மை
பலர்பரவ அருள்புரியும் பவளவெண் ணகைச்செல்வி
   பண்ணிலுறு பெண்ணமுதமே
பஞ்சின்மெல் லடியிணையைத் தஞ்சம் அடைந்தென்றும்
   பணிவேற்கருள் அன்னையே. (19)

---

# கும்பகோணத் தலச் சிறப்பு

தருமையாதீனத் தமிழ்ப்புலவர்,

வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ.

**[ திருக்குடமூக்கு, திருக்குடந்தைக்கீழ்க்கோட்டம், திருக்குடந்தைக்காரோணம் ]**

தஞ்சை மாவட்டத்தில் மிகப் பெரிய நகரம் கும்பகோணம். ஆலயங்கள் நிறைந்தும், வாணிபத்தில் சிறந்தும் விளங்கும் இவ்வூர் உலகம் அறிந்த புகழுடையது. மாயூரத்திற்கும் தஞ்சைக்கும் இடையில் விளங்கும் இந்நகரை அடையப் பல வழிகளும் வசதிகளும் உள்ளன. திருச்சிராப்பள்ளியிலிருந்து தஞ்சை வழியாகச் சென்னை செல்லும் புகைவண்டிகளிலும், சென்னையிலிருந்து மாயூரம் வழியாகத் திருச்சிராப்பள்ளிசெல்லும் புகைவண்டிகளிலும் இந்நகரை அடையலாம். திருச்சிராப்பள்ளி, தஞ்சை, திருவாரூர், சிதம்பரம், மாயூரம் முதலிய பல ஊர்களிலிருந்து இந்நகரை அடைதற்குப் பேருந்துவசதிகள் நிரம்ப உள்ளன.

கும்பகோணத்தில் தேவாரப் பாடல் பெற்ற கோயில்கள் மூன்று உள்ளன. அவை :- 1. திருக்குடமூக்கு. 2. திருக்குடந்தைக்கீழ்க் கோட்டம். 3. திருக்குடந்தைக்காரோணம்எனப்படும். திருக்குடமூக்கு திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் பாடியருளிய இரண்டு திருப்பதிகங்களையும், திருக்குடந்தைக்கீழ்க்கோட்டம் அப்பர் பாடியருளிய ஒரு திருப்பதிகத்தையும், திருக்குடந்தைக்காரோணம் திருஞானசம்பந்தர் பாடியருளிய ஒரு திருப்பதிகத்தையும் பெற்றுள்ளது.

**தலப்பெருமை :-**

பதினன்கு திருக்கோயில்களையும், பதினன்கு தீர்த்தங்களையும் கொண்டுள்ளது இத்திருத்தலம். குடக்கு – மேற்கு. நகரின் மேற்புறத்தில் கோணத்திசையில் அமைந்து விளங்குவதால் 'குடமூக்குக் கோயில்' என மாறியது எனலாம். இக்கோயிலே இத்தலத்தின் முக்கிய கோயில் ஆதலின் இக்கோயில் பெயரே பின்னர் ஊருக்குப் பெயராயிற்று. குடமூக்கு என்பதை வடமொழியில் 'கும்பகோணம்' என மொழிபெயர்த்தனர். அப்பெயரே நிலைத்து ஊருக்குப் பெயராய் இன்று வழங்குகிறது. குடமூக்கு என்பது தமிழில் குடந்தை என மருவிவழங்குகிறது. இத்தலத்தில் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை நிகழும் மகாமகதீர்த்தம் உலகப்புகழ் பெற்ற விழாவாகும்.

குடந்தையின்கீழ்த்திசையில் அமைந்துள்ளகோயில் குடந்தைக் கீழ்க்கோட்டம் எனப்பட்டது. காரோணம் - மகாசங்காரகாலத்தில் இறைவன் ஆன்மாக்களை ஐக்கியமாகக்கொண்ட தலம். காரோணம் என்ற பெயருடைய கோயில்கள் மூன்று உள்ளன. அவை நாகை, காஞ்சி, குடந்தை ஆகிய தலங்களில் உள்ளன. திருக்குடந்தைக் காரோணம் அம்பிகை இறைவனது திருமேனியை ஆரோகணம் செய்தருளியது. பேரூழிக் காலத்தில் பிரமனது வேண்டுகோளுக்கு இசைந்து பெருமான் தந்த அமுதகலசம் தங்கிய தலமாதலின் இது கும்பகோணம் ஆயிற்று எனத் தலபுராணம் கூறும். மற்றும் மூர்க்க நாயனுர் சூதாடிப் பொருளைத்தேடி அடியார்களுக்கு அமுது செய்வித் தருளிய பெருமை இத்தலத்திற்குரியது.

**எல்லை :-**

இத்தலத்தின் வடக்கெல்லை காவிரி. தெற்கெல்லை அரசலாறு. இவ்விரண்டு ஆறுகட்கும் இடையில் தெற்குவடக்கில் இரண்டுமைல் நீளமும், கிழக்குமேற்கில் ஒன்றரைமைல் நீளமும் உடையதாய்த் திகழ்கிறது இந்நகர்.

**கோயில்கள் :-**

கும்பகோணத்தில் குடமூக்குக்கோயில் கும்பேசுவ்ரர்கோயில் என்றும், கீழ்க்கோட்டம் நாகேசுரர்கோயிலென்றும், காரோணம் சோமேசர் கோயிலென்றும் வழங்கப்பெறும். இவையன்றிக் காசி விசுவநாதர் கோயில், அபிமுகேசம், கௌதமேசம், ஆதிவிசுவேசம், பாணபுரீசம், கைலாசநாதேசம், காளத்தீசம் முதலிய சிவாலயங்களும் இங்குள்ளன. இக்கோயில்களுள் இத்தலவரலாற்றிற்கியைய அமுத கடத்தின் தொடர்புடையனவாக ஆறு திருத்தலங்கள் உள்ளன. அவை அமுதகடம் வைத்திருந்த இடம் (1) கும்பேசம். அமுதகடம் வைத்திருந்த உறி சிவலிங்கமான தலம் (2) சோமேசம். அதில் சாத்தி யிருந்த வில்வம் இலிங்கமாக அமைந்த தலம் (3) நாகேசம். (இத்தலம் வில்வவனேசம் என வழங்கப்பெறும்). ஆதிசேடன் வழிபட்டதால் இப்பெயர் எய்தியது. கீழ்க்கோட்டம் எனப்பெறுவது. அமுதகுடத்தில் வைத்திருந்த தேங்காய் சிவலிங்கமான தலம் (4) அபிமுகேசம் (நாளிகேரேசம்). பெருமான் அமுதகுடத்தை வில்லால் சிதைத்த இடம் (5) பாணபுரேசம். இது பாணுதுறை என வழங்குகிறது. கும்பம் சிதறியகாலத்தில் அதன்மீதிருந்த பூணூல் சிதறிச் சிவலிங்கமான தலம் (6) கௌதமீசம் எனப்படும்.

மகாமகதீர்த்தக்கரையைச்சூழப் பிரமதீர்த்தேசம், முகுந்தேசம், தனேசம், ரிஷபேசம், பாணேசம், கோணேசம், பக்தேசம், பைரவேசம், அகத்தீசம், வியாகேசம், உமாபாகேசம், நைருதீசம், பிரமேசம், கங்கா தரேசம், ஷேத்ததீர்த்தேசம் முதலிய ஆலயங்களும் உள்ளன.

சாரங்கபாணிகோயில், சக்ரபாணிகோயில், இராமசாமிகோயில், இலட்சுமி அம்மன் கோயில், வரதராசப்பெருமாள்கோயில் முதலிய வைணவ ஆலயங்களும் உள்ளன.

**தீர்த்தங்கள் :-**

இத்தலத்தில் 14 தீர்த்தங்கள் உள்ளன. அவைகளில் தடாகங்கள் 7, கிணறுகள் 3, காவிரித்துறைகள் 4.

**மகாமகதீர்த்தம் :-**

இத்தீர்த்தம் கும்பகோணத்துக்குத் தனிச்சிறப்பைத்தரும் பெரிய திருக்குளமாகும். வடஇந்தியாவில் நிகழும் கும்பமேளாபோன்று 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை இங்கு நிகழும் மகாமகதீர்த்தவிழா, புகழ்பெற்ற தீர்த்த விழாவாகும். மகாமகம் என்பது குரு சிம்மராசியில் நிற்க, சந்திரன் கும்பராசியிலிருக்கும் நிறைமதிநாளாகும். அமுத சரோருகம், கன்னியர்தீர்த்தம் எனவும் வழங்கப்பெறும். அமுதகும்பம் வழிந்தோடித் தேங்கியதால் அமுதசரோருகம் எனவும், மாசிமகத்தில் கங்கை முதலிய ஒன்பது புண்ணிய நதிகளும் கன்னியர் உருவம்தாங்கி நீராடியதால் கன்னியர்தீர்த்தம் எனவும் பெயர்க்காரணம் வழங்கப் படுகிறது. திருநாவுக்கரசு சுவாமிகள்,

" தாவிமுதல் காவிரிநல் யமுனை கங்கை
சரசுவதி பொற்றாமரை புட்கரணி தெண்ணீர்க்
கோவியொடு குமரிவரு தீர்த்தம் சூழ்ந்த
குடந்தைக் கீழ்க் கோட்டம் "

எனவும் குறித்தருளுவர். சரயு, கங்கை, யமுனை, சரசுவதி, நருமதை, கோதாவரி, கிருஷ்ணு, காவிரி, குமரி என்ற ஒன்பது நதிகளும் கன்னிகைகளாக இத்தீர்த்தத்தின் கரையிலுள்ள காசிவிசுவநாதர் கோயிலில் விளங்குகின்றனர்.

இத்திருக்குளத்தைச்சூழ 16 மண்டபக் கோயில்கள் உள்ளன. இவற்றை அச்சுதப்ப நாயக்கரின் அமைச்சராகிய கோவிந்ததீட்சதர் நிறுவினர் என்பர். இத்திருக்கோயில்களில் உள்ள சிவலிங்கங்கள், அவற்றைத்தாபித்து வழிபட்டோர் பெயரால் விளங்குகின்றன. இந்திரன், அக்னி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் ஆகிய அஷ்டதிக்குப்பாலகர் பெயர்களாலும் பிர்மா கங்கை முதலிய நதிகளின் பெயர்களாலும் வழங்கப்படுகின்றன. கீழ்க்கரையில் உள்ள படித்துறை முதல் நருமதை, சரசுவதி, காவிரி, குமரி, பாலாறு, சரயு, கங்கை, யமுனை, கோதாவரி தீர்த்தங்களும், அக்னிமூலை முதலாக அக்னி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன், இந்திரன் ஆகியோர் பெயரிலமைந்த தீர்த்தங்களும் இருக்கின்றன. மேல்கரையில் வருணதீர்த்தத்துக்கு அடுத்து, தேவதீர்த்தம் இருக்கிறது.

இக்குளத்தின் நடுவில் அறுபத்தாறுகோடி தீர்த்தங்களும் உள்ளன. இத்திருக்குளத்தில் உள்ள பதினெட்டு தீர்த்தங்களிலும் மூழ்குவோர் சொர்க்கமுறுதல் முதலாகக் கலிநீக்கம் வரையுள்ள பலன்களைத் தனித் தனியே எய்துவர் எனப் புராணம் கூறும். இத்தீர்த்தத்தை வலம் வந்தாலும், வணங்கினாலும், ஆசமனம்செய்தாலும், முழுகினாலும் பெரும்பயன் விளையும். மகாமகக் குளத்தில் நீராடுவோர், 101 தலை முறையினர்வரை செய்த பாவங்கள் நீங்கப்பெறுவர்.

மகாமக வருஷத்தில் விவாகம் முதலிய நற்கருமங்கள் செய்தல் ஆகாது. தீர்த்த யாத்திரைமட்டுமே செய்யலாம். ஆண்டுதோறும் மாசிமக விழாவும், 12 ஆண்டுகளுக்கொருமுறை மகாமக விழாவும் நடைபெறும். மாசிமகநாளில் கும்பகோணத்தில் உள்ள எல்லா மூர்த்திகளும், இத்திருக்குளத்திற்கு எழுந்தருளித் தீர்த்தம்கொடுக்கும் அற்புதநிகழ்ச்சி நடைபெறும். பல்லாயிரக்கணக்கானமக்கள் இங்கும், பொற்றாமரை முதலிய தீர்த்தங்களிலும், முடிவில் காவிரியிலும் நீராடி மகிழ்வர்.

**பொற்றாமரை :**

இது சாரங்கபாணிகோயிலின் பின்புறம் கடைத்தெருவை அணுகி யுள்ளது. திருமகள் இக்குளத்தில் குழந்தையாய்த்தோன்றி ஏமரிஷி யால் வளர்க்கப்பெற்று ஆராவமுதப்பெருமானை மணந்தார். அமுத தீர்த்தம் என்பது பழைய பெயர். இதன் வடகரையில் ஏமரிஷி மண்டபமுள்ளது.

**கும்பேசுரர் ஆலய அமைப்பும் சிறப்பும் :**

இக்கோயிலே இத்தலத்தின் தலைமைக் கோயிலாகும். ஊருக்கு மேற்கே இக்கோயில் அமைந்துள்ளது. கிழக்கு நோக்கிய சந்நிதி. மூன்று கோபுரங்களும், மூன்று பிராகாரங்களும் உள்ளன. இராஜ கோபுரம் ஒன்பது நிலைகளையுடையது. கடைவீதியிலிருந்து இராஜ கோபுரவழியே கோயிலுக்குள்செல்லலாம். இராஜகோபுரத்தையடுத்து வலதுபுறத்தில் சூரியபுஷ்கரணி தீர்த்தம் உள்ளது. மேற்புறமுள்ள மண்டபத்தில் 'சட்டைநாதர்' விளங்குகிறார். அதையடுத்து மங்கள விலாசம் எனப்படும் அழகிய மண்டபம் உள்ளது இக்கோயிலில் உள்ள எல்லா மண்டபங்களும், கற்றூண்களும் மிக்க வேலைப்பாடு உடையனவாய்த் திகழ்கின்றன. இரண்டாம் கோபுர வாயிலின் இருபுறமும் விநாயகர், முருகன் காட்சிதருகின்றனர். இரண்டாம் பிராகாரத்தில் கொடிமரமும், அதையடுத்த மண்டபத்தில் நந்தி பலி பீடங்களும் உள்ளன. அதையடுத்து முதற்பிராகாரம் உள்ளது. வல மாகவந்தால் கீழ்புறம், தென்புறம் ஆகிய இடங்களில் அறுபத்துமூவர் திருவுருவங்கள் (மூலவர், உற்சவர்) எழுந்தருளுவிக்கப்பெற்றுள்ளன. மேற்குப்பிராகாரத்தில் விநாயகர், முருகன், கஜலட்சுமி ஆகியோர்

விளங்குகின்றனர். முருகன் ஆறுமுகங்களும், ஆறுகைகளும் உடைய வராய்த்திகழ்கின்ருர். வடக்குப்பிராகாரத்தில் சுவாமிக்கு இடதுபுறத் தில் அம்பாளுக்கு, கிழக்குநோக்கிய நிலையில் கோயில் அமைக்கப்பட் டுள்ளது. அம்பிகையின் திருப் பெயர் அருள்மிகு மங்களாம்பிகை எனப் படும். வடக்குப்பிராகாரத்தில் தெற்குநோக்கிய நிலையில்இறைவன் இத் தலத்திற்கு எழுத்தருளிவந்த - "கிராதவேடத்தில் வந்த பெருமான்" விளங்குகிருர். அருள்மிகு கும்பேசுரர் பிருதுவி வடிவில் விளங்கு கிருர். ஆவுடையார் சதுரவடிவம். பாணத்தின் உச்சி குடமூக்குப் போல உள்ளது. அபிடேகம் இல்லை. புனுகுச்சட்டம் மட்டுமே சாத்தப்படும்.

**புராண வரலாறு :-**

பேரூழிக்காலம்வருவதையறிந்த பிரமன் திருக்கயிலையையடைந்து சிவபெருமானை வணங்கினுன். இறைவன் பிரமனை வந்த காரியம் வினுவினர். பிரமன் "பெருமானே ஊழிப்பெருவெள்ளம் அண்மை யில் வரப்போகிறது. உலகம் அழிந்தால் உயிர்த்தொகைகளை மீண்டும் எவ்வாறு படைப்பது என அறியாது திகைக்கிறேன்" என்ருன். பெருமான் அமுதமும் மண்ணும் கலந்தமைத்த குடத்தை ஆக்கு வித்து, படைத்தல்தொழிலுக்குப்பயன்படும்சிருஷ்டிபீஜத்தை அந்தக் குடத்துள்பெய்து அவனிடம் தந்து, மாவிலை, தேங்காய், வில்வம், நூல் ஆகியவற்ருல் அணிபெறச்செய்து மேருமலையில் உறியில் வைக்குமாறுபணித்தார். நான்முகனும் அவ்வாறேசெய்து சிவனருளைச் சிந்தித்துக் காலம் நோக்கிக் காத்திருந்தான்.

சிலநாட்கள் சென்றன. குறித்த பிரளயம் வந்தது. அமிர்தகடம் தெற்குநோக்கி அதில் மிதந்துவரலாயிற்று. இத்தலத்தின் அருகே வந்தவுடன் குடம் நீர்ச்சுழியில் சுழன்றது. மாவிலை தர்ப்பைகள் நெகிழ்ந்துவீழ்ந்தன. சிவபெருமான் கணநாதர் சூழ்ந்துவர, வேட்டுவ உருவம் தாங்கி இத்தலத்தின் வடபால் எழுந்தருளினுர். குடத்தின் மீது அம்பைச் செலுத்தினுர். குடம் பிளவுற்றது. அமுதம் நாற்புறமும் சிதறியது. குடத்திலிருந்த தேங்காய், வில்வம், முதலியன ஆங்காங்கே சிதறின. உடைந்த குடத்தின் கீழ்ப்பகுதி (கோணம்) இருந்த இடத்தில் தங்கிற்று. இறைவன் அமுதமணலைப் பிசைந்து அக் குடத்திலிட்டு இலிங்க வடிவாக்கித் தாமே பூசித்தார். அவ்வருட் குறியில்புக்கு ஒன்றி உடனுறைர். இத்திருவுருவமே (கும்பத்தில் தோன்றியதால்) கும்பேசர் எனப்பட்டது. கும்பேசருக்கு ஆதி கும்பேசர், அமுதகும்பேசர் என்ற பெயர்களும் உண்டு. இங்கு அம்மை மங்களாம்பிகை எனப் பெயர்பெற்ருர்.

உடனிருந்துகண்ட பிரமன் பூசித்துப் பேறுகள் யாவும் பெற்ருன். மற்றும் கும்பமிருந்த உறி சோமேசமாயிற்று. மற்றும் தாய் தந்தையர்

களும், பலமுறை மணம் செய்துகொண்ட பல மனைவியர்களும், பிறக்கும் குழந்தைகளும் விண்ணுலகடையக் கண்டு வருத்தமுற்ற சுதன்மன் என்னும் அந்தணன் தீர்த்தயாத்திரைசெய்து வருகையில் அகத்தியரின் சீடன் குசிகருடன் இங்குவந்து வழிபட்டு நல்வாழ்வு பெற்ருன். பிரமன்சபையில் நெருக்கம்காரணமாகத் துர்வாசமுனிவரின் காலில் குளம்புபட அதனுல் சாபமுற்ற காமதேனு இங்குவந்து கும்பேசுரரை வணங்கிச் சாபம் நீங்கப்பெற்றது. குளம்பினுல் தீர்த்த முண்டாக்கி அதன்கரையில் விநாயகரைப் பிரதிட்டித்து வழிபட்டது. இவரே சுவேத விநாயகர். மற்றும் கிருதவீரியன், வீரவன்மன், இந்திரன், மரந்தாதா, சுவர்ணரோமன், காசிபமுனிவர் முதலியோரும் பூசித்துப் பேறுகள் பெற்றுள்ளனர்.

**காகேசுரர் ஆலய அமைப்பும் சிறப்பும் :-**

அமுதகும்பத்தின் வில்வம் சிவலிங்கமானதலம் இது. இத்தலம் குடந்தைக்கீழ்க்கோட்டம் என வழங்கப்பெறும். ஆலய அமைப்பு :- நகரின் நடுவே பேருந்து நிலையத்திற்கு அருகே கிழக்கு நோக்கி யுள்ளது. கோயில் இராஜகோபுரம் ஐந்துநிலைகளையுடையது. இரண்டு பிராகாரங்கள் உள்ளன. கோபுரவாயிலில் நுழைந்ததும் தென்புறம் சிங்கமுகதீர்த்தம் இருக்கிறது. வடபுறம் அம்பாள்கோயில் தெற்கு நோக்கி விளங்குகின்றது. உள்வாயிலின் இடப்புறம் விநாயகர், முருகன் விளங்குகின்றனர்.

இரண்டாம் பிராகாரத்தில் இக்கோயிலுக்கு மிக்க சிறப்பைத்தரும் நடராஜமண்டபம் உள்ளது. பேரம்பலம் எனப்படும் இம்மண்டபம் தேர்வடிவில் சக்கரங்கள் பொருத்தப்பெற்று இரண்டு குதிரைகள், நான்கு யானைகள் பூட்டிய நிலையில் மிக்க அழகோடு திகழ்கின்றது. இங்குள்ள ஆனந்தக்கூத்தரின் அழகிய பெரிய திருவுருவம் தரிசிக்கத் தக்கது. நடனத்துக்குத் திருமால் வேணுகானம் செய்கிருர். ஸ்படிக லிங்கம் உள்ளது. திருவாதிரையில் சிறப்பான அபிடேகம் நிகழும். எதிர்ப் புறத்தே நடராஜ மண்டபம். இதில் ஊர்த்துவ தாண்டவ மூர்த்தி விளங்குகிருர். எதிரே காளியம்மன். தெற்குப் பிராகாரத்தில் மகாலிங்கம் எழுந்தருளியுள்ளார்.

முதல் பிராகாரத்தில் வலம்வரும்போது முதலில் மாரியம்மன் சந்நிதி உள்ளது. அதையடுத்துத் தெற்குப் பிராகாரத்தில்பிரளயகால ருத்திரர்சந்நிதி உள்ளது. இவரை ஞாயிற்றுக்கிழமை இராகு கால நேரத்தில் வழிபடுவதுவிசேடம். பேரழகோடுகூடிய பெரிய மூர்த்தி. அவரையடுத்து மேற்புறம் விநாயகர்,ஐயனுர், முருகன், கஜலட்சுமி முதலியோர் உள்ளனர். வடபுறம் இத்தலத்தில் சிறப்பாக உரிய பகவர் சந்நிதி உள்ளது. வடக்குப் பிராகாரத்தில் துர்க்கை சந்நிதி தனி மண்டபத்தோடு திகழ்கிறது. அடுத்து சூரியன் கோயில், சண்டீசர்

கோயில் ஆகியன உள்ளன. தலமரம் வில்வம் இங்குள்ளது. கோஷ்டங்களில் தெற்கே தட்சிணாமூர்த்தி, மேற்கே அர்த்தநாரீசுவரர் வடக்கே பிரமன் ஆகியோர் உள்ளனர்.

சுவாமி கர்ப்பக்கிருகத்தில் பெரியோர் பலரின் சிற்பங்கள் அமைக்கப்பெற்றுள்ளன. சோழர், பல்லவர்காலத் திருப்பணிகளால் அழகிய சிற்பங்களும், தூண்களும் கோயிலில் இடம் பெற்றுள்ளன. சுவாமி சந்நிதி மிக்க மன ஒருமையை உண்டாக்க வல்லதாக விளங்குகிறது. சுவாமிசந்நிதியில் இலங்கும் கங்கை விநாயகர் தரிசிக்க வேண்டிய அழகிய வேலைப்பாடுடைய மூர்த்தி. அருள்மிகு நாகேசர் பெரிய ஆவுடையாரில் சிறிய பாணத்தில் திகழ்கிருர்.

இரண்டாம்பிரகாரத்தில் அம்பாள் அருள்மிகு பெரியநாயகியைத் தரிசிக்கலாம். சித்திரை மாதம் 11, 12, 13 தேதிகளில் சூரியபூசை நிகழ்கிறது.

**மூர்த்திகள் :**

விநாயகர் - சித்திவிநாயகர் ; கங்கை விநாயகர் எனப்பெறுவார். பெருமான் திருப்பெயர் அருள்மிகு நாகேசுரர்; நாகநாதர், வில்வவனேசர், கீழ்க்கோட்டமுடையார், பாதாள பீகநாதர் என்ற பெயர்களும் வழங்கும். அம்மை பெயர் அருள்மிகு பெரியநாயகி.

**புராணவரலாறு :**

பூமியைத்தாங்கமாட்டாது வருந்திய ஆதிசேடன், கயிலைசென்று தன்குறையைத் தெரிவித்து, இறைவன் ஆணைப்படியே இங்கு வந்து ஒரு தீர்த்தம் உண்டாக்கி, இறைவழிபாடாற்றி வேண்டிய வரம் பெற்ருன். நாகராஜன் வழிபட்டதால் இத்தலம் நாகேசம் எனப்பெற்றது. சூரியன் இங்கு வழிபட்டுப்பேறுகள் பலவும்பெற்றுள்ளான். சித்திரைமாதம் 11ம் நாள் முதல் மூன்றுநாட்கள் சூரியபூசை நிகழ்கிறது. பகவர் திருமறைக்காட்டிலிருந்து தன் தாயாரின் அஸ்தியை எடுத்துக்கொண்டு காசி செல்லும்வழியில் இங்குவந்து தங்கி, இத்தலத்தின் சிறப்பையறிந்து காவிரியில் அஸ்தியைக் கரைத்து தவம் செய்து வீடுபெற்ருர். இவர்வேண்டுகோளின்படி இங்குள்ள காவிரித்துறை பகவத்படித்துறை என வழங்கப்படுகிறது.

**சோமேசர் ஆலய அமைப்பும் சிறப்பும் :**

குடந்தைக் காரோணம் எனவழங்கப்பெறும் தலம் இது, பொற்றுமரைக்குளத்தின் கீழ்க்கரையில் விளங்குவது. காரோணம் என்று வழங்கும் தலங்கள் இங்கு இரண்டு உள்ளன. ஒன்று சோமேசம்பிறிதொன்று மகாமகக்குளத்தின் வடகரையில்உள்ள காசிவிசுவேசம்காயஆரோகணம் காரோணமாயிற்று எனக்கூறுவர். அம்பிகை இறைவன் திருமேனியை ஆரோகணித்த தலமாதலின் சோமேசம்

காரோணமாயிற்று. இராமன் இராவணனைக்கொல்ல ருத்திராம்சம் வேண்டி வழிபட்டு உடலில் ருத்திராம்சம் ஆரோகணிக்கப்பெற்றனன் ஆதலின் விசுவேசமும் காரோணம் எனப்பெறும்.

"தேனார்மொழியார் திளைத்தங்காடித் திகழும்குடமூக்கில்
கானார்நட்டம் உடையார்செல்வக் காரோணத்தாரே"

என்ற ஞானசம்பந்தர் தேவாரத்தில் குறிக்கப்பெறும் அம்பிகை திருப் பெயர் வழங்கும்தலம் சோமேசமாதலின் இதுவே தேவாரப்பாடல் பெற்ற தலமென்பர்.

"பூமருவு கங்கை முதல் புனிதமாம் பெருந்தீர்த்தம் மாமகம்தான் ஆடுதற்கு வந்து வழிபடும் கோயில்" எனச் சேக்கிழார் காரோணத் தலத்தைக் குறிப்பிடுகின்றார். ஒன்பது நதிகளும் கன்னிகைகளாகி வழிபட்டது, விசுவேசத்திற்கே பொருந்தும் எனக்கொண்டு விசுவே சமே காரோணம் எனப்பெறும் என்று கூறுவாரும் உளர்.

புண்ணிய நதிக்கரைகளிலும், தீர்த்தக்கரைகளிலும் விசுவ நாதரைப் பிரதிட்டைசெய்து வழிபடுவதைப் பலதலங்களிலும் காணலாம். கோயில்களில் காசிசென்று வந்தவர்கள் நர்மதை போன்ற நதிகளிலிருந்து தாம் கொண்டுவந்த பாணங்களைப் பிரதிட்டை செய்து வழிபடுவதுண்டு. அம்முறையில் மகாமகக்குளம் புண்ணிய தீர்த்த மாய் - எல்லாநதிகளும் கன்னியர்களாகிவந்து மூழ்கி இறையருள் பெற்ற தீர்த்தமாதலின் இத்தீர்த்தக்கரையில் விளங்கும் விசுவேசம் தீர்த்தக் கோயிலாகத் திகழ்கிறதென்றும், சோமேசம் தலக்கோயிலாக விளங்குகிறதென்றும் கொள்ளலாம். எனவே சோமேசமே தேவாரப் பாடல்பெற்ற காரோணத்தலம் எனக்கொள்ளல் பொருந்தும்.

அமுத கும்பம் வைத்திருந்த உறி சிவலிங்கமான தலம் இது ஆதலின் சிக்கேசம் எனவும் (சிக்கம் - உறி), சந்திரன் வழிபட்ட தலமாதலின் சோமேசம் எனவும் கூறப்பெறும்.

**ஆலய அமைப்பு :-**

பொற்றாமரைக் கரையின் கீழ்பால், நகரின் மையப் பகுதியில் திகழும் இத்திருக்கோயில் கிழக்குப் பார்த்த சந்நிதியை உடையது. சுவாமி கிழக்குநோக்கியும் அம்மை தெற்கு நோக்கியும் திகழ்கின்றனர் ஐந்து நிலைகளையுடைய கோபுரம் கிழக்கேஉள்ளது. அம்பாள் சந்நிதி பேருந்துச்சாலையையடுத்து விளங்குவதால் இவ்வழியாலேயே அனை வரும் ஆலயத்திற்கு வருகின்றனர்.

இராஜகோபுர வாயிலைக்கடந்து திருக்கோயிலுக்குள் நுழைந்ததும் திருமாலும் வானவரும்வழிபட்ட சிவலிங்கங்களைத் தரிசிக்கலாம். அதற்கு அம்பாள் மங்களாம்பிகை. ஆலயத்திற்குள் நுழைந்து பிராகாரத்தை வலம்வரலாம். மேற்குப் பிராகாரத்தில் விநாயகர் முருகன் விளங்குகின்றனர். முருகன் திருவுருவம்பேரழகுடையது.

முருகனுக்குப் பக்கத்தில் சோழீச்சரம் என்றொரு ஆலயம் உள்ளது. கர்ப்பக்கிருக கோஷ்டங்களில் தென்புறம் தட்சிணாமூர்த்தியும், மேற்புறம் அர்த்தநாரீசுவரரும் உள்ளனர்.

சுவாமிசந்நிதியின் நுழைவாயிலில் குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டத்தினர் பிரதிட்டை செய்த சமயாசாரியர் திருவுருவங்களும், திருப்பதிகக் கல்வெட்டும், கோடி பஞ்சாட்சரக்கோயிலும் உள்ளன. சோமேசர் அழகிய சிவலிங்க உருவில் திகழ்கிறார். பாணம் நர்மதை பாண அமைப்பில் திகழ்கிறது. கருவறையைச் சுற்றியுள்ள சுவரில் எண்மர் கும்பிட்ட நிலையில் விளங்குகின்றனர். மகாமகம் ஆடுதற்கு நவநதிக் கன்னியர்கள் ஆரவாரத்துடன் வரக்கண்ட அம்பிகை இறைவனை ஆரோகணம் செய்துகொண்டாளாதலின் இறைவன் காயாரோகணர் எனவும், சந்திரனால் வழிபடப்பெற்றவராதலின் சோமேசர் எனவும் வழங்கப்பெறுவர்.

அமுதகலசத்தின் சிக்கம் சிவலிங்கமாக மாறியதால் இம்மூர்த்தி சிக்கேசர் எனவும் கூறப்பெறுகிறார். சுவாமி எழுந்தருளியுள்ள கர்ப்பக்கிருகத்தை அடுத்த மகாமண்டபத்தில் நடராஜர் மற்றும் சோமாஸ்கந்தர் விளங்குகின்றனர். அம்பாள் தெற்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

**மூர்த்திகள்:**

இறைவன் திருப்பெயர் அருள்மிகு சோமேசுரர். இறைவி திருப்பெயர் அருள்மிகு தேனார்மொழியாள்; சோமசுந்தரி எனவும் கூறப்பெறும்.

**புராண வரலாறு:**

அமுத கும்பத்திற்கு ஆதாரமாயிருந்து இறைவன் எய்த அம்பால் சிதறி விழுந்த உறி இலிங்க வடிவுற்றது. இவ்விலிங்கத்தைச் சந்திரன் (சோமன்) பூசித்துப் பேறு பெற்றமையால் பெருமான் சோமேசர் எனப் பெற்றார். உறி, இலிங்கமானதால் தலம் சிக்கேசம் எனப் பெற்றது. இங்குள்ள அம்பிகையின் பெயர் சோமசுந்தரி. வியாழன் பூசித்ததால் வியாழசோமேசர் என்ற பெயரும் பெருமானுக்குரிய பெயராக வழங்கப்படுகிறது. தீர்த்தம் சோமதீர்த்தம். மாளவதேசத்து அந்தணர் ஆங்கீரசு என்பாரின் புதல்வர் மூவர்களில் இரண்டாமவனான பிரகஸ்பதி என்பவன் இத்தலத்தில் வழிபட்டு இறைவன் ஆணைப்படி யாகங்களைச்செய்து தேவகுருவாகும் பேற்றைப்பெற்றான்.

**காசி விசுவேசர் ஆலய அமைப்பும் சிறப்பும்:**

இதுவும் காரோணம்எனக்கூறப்படுதலின் இவ்வாலயஅமைப்பையும் சிறப்பையும் காண்போம். இத்திருக்கோயில் மகாமகக் குளத்திற்கு வடகரையில் இருக்கிறது.

அயோத்தி மன்னராகிய இராமர் இராவணனைக்கொல்ல உருத்திராம்சம் வேண்டி வந்தார். கும்பகோணத்தை அடைந்து அகத்தியரை வினவினர். அம்முனிவர் கும்பகோணத்தில் சிலநாள் தங்கி விசுவேசரைத் தரிசிப்பாயேல் நீ எண்ணியது கைகூடுமென்றூர். அவ்வாறே இராமர் இங்கு விசுவேசரை வழிபட்டு, தன் உடலில் (காயத்தில்) உருத்திராம்சம் ஆரோகணிக்கச் செய்தார். அதனுல் இத்தலம் காரோணம் எனப் பெயர்பெற்றது.

நம்நாட்டிலுள்ள புண்ணிய நதிகளாகிய கங்கை யமுனை முதலிய ஒன்பதும் கன்னியர்உருக்கொண்டு கயிலையை அடைந்து உமையொரு பாகனைப் போற்றி 'ஐயனே! மக்கள் எங்கள்பால் மூழ்கிப் பாவங்களைத் தீர்த்துக்கொள்கின்றனர். அப்பாவம் எங்களைப்பற்றி வருத்துகிறது. அதனை அகற்றி அருளுக' எனவேண்டினர். பெருமான்கும்பகோணத்திலுள்ள மகாமகதீர்த்தத்தில் நீராடினுல் உங்கள்பாவம் அகலும் என்று அருள்செய்து, அவர்களை அழைத்துக்கொண்டு குடந்தை வந்து. மகாமகக்குளத்தைக்காட்டிக் கரையில் மேற்குமுகமாக வீற்றிருந்தருளினர். அதுவே விசுவேசம் எனப்படும் கோயிலாகும். நதிக்கன்னியர் நீராடி விசுவேசுரரை வழிபட்டுத் தூய்மையுற்றனர். விசுவேசர் மேற்கு மூகமாகவும், நதிக்கன்னியர் தெற்குநோக்கியும் வீற்றிருக்கின்றனர்.

**தலபுராணம் :-** மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள் எழுதிய குடந்தைப் புராணம் இருக்கிறது.

**பஞ்சக்குரோசத் தலங்கள் :-** இத்தலத்தைச்சூழ குரோசதூரத்திலுள்ள தலங்கள் திருவிடைமருதூர், திருநாகேச்சரம், திருத்தாரேச்சரம் (தாராசுரம்), திருவேரகம், திருப்பாடலவனம் (கருப்பூர்) என்பன.

**சப்தஸ்தானத் தலங்கள் :-** கும்பகோணத்தைத் தலைமையாகக் கொண்ட சப்தஸ்தானங்கள் ஏழு உள்ளன. அவை, கும்பகோணம், கலயநல்லூர், வலஞ்சுழி, தாராசுரம், சுவாமிமலை, கொட்டையூர், மேலைக்காவிரி ஆகியன.

**கல்வெட்டுக்கள் :**

சகம் 1475 இல் அதாவது கி. பி. 1554-இல் மகாமண்டலேஸ்வரன் குருராஜருத்திரதேவசோழ மகாராஜா, ஆதிகும்பேஸ்வரருக்குத் திருவமுதுக்கும், பிராமணர்களுக்கு அன்னம் அளிக்கவும், வயலூர் இளங்கட்டளைக் கிராமம் என்னும் இருஊர்களைக் கொடுத்துள்ளான். தஞ்சை நாயக்க மன்னரில் சேவப்பநாயக்கஐயன் காலத்தில், திருமலைராசபுரத்துப் பிராமணர்கள், தாங்கள் வாய்க்கால் ஒன்றை வெட்டிக் கொள்வதின் பொருட்டு, திருவாலந்துறை புத்தர் கோயிலுக்கு உரிய நிலத்தைப் பயன்படுத்திக் கொண்டதற்கு, அப்புத்தர் கோயிலுக்கு வேறு நிலம் விட்டதை உணர்த்துகின்றது.

# வெள்ளத்தால் பாழான வேட்டுவக் கவுண்டர் கோயில்

திரு. வி. இராமமூர்த்தி

குளங்கள்பல வுங்குழி யுந்நிறையக்
குடமாமணி சந்தன மும்மகிலும்
துளங்கும்புன லுட்பெய்து கொண்டுமண்டித்
திளைத்தெற்றுசிற் ருறதன் கீழ்க்கரைமேல்
வளங்கொள்மதில் மாளிகை கோபுரமும்
மணிமண்டப மும்மிவை மஞ்சுதன்னுள்
விளங்கும்மதி தோய்வெஞ்ச மாக்கூடல்
விகிர்தாஅடி யேனையும் வேண்டுதியே.

என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளால் பாடல்பெற்ற வெஞ்சமாக் கூடலூர் இன்று பாழாகக் கிடக்கிறது. சென்ற ஆண்டு 1977-ல் ஏற்பட்ட வெள்ளத்தின் கொடுமையில் சிக்கி உருத் தெரியாமல் சிதைந்து கிடக்கும் வெஞ்சமாக் கூடல் விகிர்தேசுவரர் ஆலயம் இன்று கேட்பாரற்றுக் கிடக்கிறது. இரண்டாம் ஆண்டு வந்தும் இன்னும்பழுதுபார்க்க நாதியில்லாமல் பழம்பெருமை காட்டும் வெறுஞ் சின்னமாக் காட்சியளிக்கும் கோயிலின் பகுதிகளை நேரில்கண்டால் கண்ணீர் பெருகும்.

சிற்ருறு எனப்படும் குடவனுற்றின் கரைமேல் மாமல்லபுரம் கடற்கரைக் கோயிலை நினைவூட்டும் வண்ணம் மிக அழகிய கோபுரத் துடன் இடிபாடுகளாகக் காட்சி தரும் இக்கோயிலைச் சுற்றி மாபெரும் வரலாறு பொதிந்து கிடக்கிறது. குடவனுறும் சிற்ருறும் கலக்குமிடத் தில் அமைந்துள்ள ஊர் ஆதலால் கூடல் என்று பெயர் பெற்ற ஸ்தல மாக ஒரு காலத்தில் விளங்கியிருத்தல் வேண்டும். இவ்வூரைத் தலை நகரமாகக் கொண்டு வெஞ்சமன் என்னும் வேட்டுவ அரசன் ஒரு காலத்தில் ஆண்டுவந்தானும். சிறந்த சிவபக்தனுன இவன் சமணர் படைகளை எதிர்த்துப் போர்செய்து வெற்றி பெற்றும் மாற்ருன் ஒருவனுல், (ஒரு பெண் என்கிருர்கள்) காட்டிக்கொடுக்கப்பட்டு உயிரி ழந்தானும். இவன் வரலாற்றிலிருந்தும், சமணர் படைகளைஎதிர்த்து போர் செய்தான் என்பதிலிருந்தும் சமண சமயத்தவர்களான களப்பிர அரசர்களின் காலத்தில் இவன் வாழ்ந்திருக்கக் கூடும் எனவும்

பெரியபுராணம் குறிப்பிடும் கூற்றுவ நாயனாராக இவன் இருத்தல் கூடும் என்றும் தோன்றுகிறது. இவன் காலத்தைப்பற்றி உறுதியாக எதுவும் கூறத்தக்க சான்றுகள் இல்லை. ஆயினும் திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் இத்தலத்தைப் பாடாமையால் இவர்கள் காலமான 6-ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு இவன் வாழ்ந்திருக்கக் கூடும் என்று தோன்றுகிறது. அங்ஙனமெனில் 6-ஆம் நூற்றாண்டிற்குப் பிறகும் களப்பிரர் ஆதிக்கம் இப்பகுதியில் நிலவியிருத்தல் வேண்டும். அல்லது இவன்காலத்தில் கங்கபாடி நாட்டை அரசாண்ட கொங்கணி அரசர்கள் சிறப்புடன் விளங்கினமையால் அவ்வரச மரபினர்களுள் ஒருவனுடன் இவன் போரிட்டு இருத்தல் கூடும். அக்காலத்தே அவ்வரச மரபினர்கள் சமண சமயத்தைச் சார்ந்தவர்களாகவே விளங்கினர். எவ்வாறுயினும் இவ்வரசர்பெருமகன் 7-ஆம் நூற்றாண்டளவில் இப்பகுதியை ஆண்டவனாக இருத்தல் கூடும் என்று துணிந்து கூறலாம். இவன் வரலாற்றை ஆராய்ந்து தெளிவுகாண முயல்வதால் கொங்குநாட்டின் வரலாற்றில் ஒருகாலகட்டம் விளக்கமுறும்.

சுந்தரர் பாடலில் குறிக்கப்படுவது போல இப்பகுதி வளம்மிகுந்த கோட்டையையும். மாடமாளிகைகளையும், மணிமண்டபம், கூடகோபுரங்களையும்கொண்ட ஒருபெரும்நகரமாக விளங்கியிருத்தல்வேண்டும் என்பதற்கான சான்றுகள் வெள்ளத்தின் கொடுமையால் அழிவுற்ற பிறகு வெளிப்பட்டுள்ளது. சுற்றிலும் கோட்டைமதில் இருந்ததற்கான தடயமும் ஒருபக்கம் செயற்கை அகழி இருந்ததற்கான தடயமும் இன்று காணப்படுகிறது. வளமுள்ள நகராக இப்பகுதி விளங்கியிருத்தல் கூடும் என்பதைக் காட்ட, பழங்காலத்துப் பானைஓடுகளும், வீடுகள் நீர்த்தொட்டிகள் ஆகியன இருந்ததற்கான இடிபாட்டுச் சின்னங்களும் காணப்படுகின்றன. கோயிலுக்கு அருகே ஒரு பெரிய மணல்மேடு நான்கைந்து அடி உயரத்திற்கு இருந்ததாம். அப்பகுதியை வெள்ளம் தாக்கி மேட்டைக்கரைத்துவிட்டிருக்கிறது. அந்த இடத்திலே பழங்கால நாகரிகத்தை விளக்கும் சான்றுகள் மேலேழுந்தவாரியாகக்காணப்படுவதால் வெள்ளத்திற்கு நன்றிசெலுத்தவேண்டும் நாம். தொல்லியல் துறையினர் இப்பகுதியில் அகழ்வாராய்ச்சி மேற்கொண்டால் வியப்பூட்டும் பல சான்றுகள் கிடைப்பதோடு, வெஞ்சமனின் காலத்தைச் சரியானபடி கணக்கிடவும் உதவியாக இருக்கும். தொல்லியல் துறையினருக்கு நான் இதுபற்றி எழுதியிருக்கிறேன்.

கோயில் அமைப்பு மிகவும் பழமையானதாகக் காணப்படுகிறது. முன் இக்கோயிலில் இறைவனாக விளங்கிய இலிங்கத்தின் பின்னப்பட்ட சிற்பம் சிறிது தொலைவில் ஒரு காட்டில் கிடக்கிறது. அந்த இலிங்கத்தின் அமைப்பு அது. கி.பி. 8-ஆம் நூற்றாண்டிற்கு முந்தையதாகக் காணப்படுகிறது. கோயிலமைப்பு கொங்கு நாட்டின் பாணியில் கொடிமரம் முன்னால்காணப்பட, அதற்கு சற்றுகீழாகச் சிலபடிகள்

இறங்கி, பின் சமதளத்தில்கட்டப்பட்டுள்ளது. முன்னால் இடிந்த நிலையில் மிகப் பழங்கால இராசகோபுர அமைப்பு காணப்படுகிறது. இந்த இராசகோபுர அமைப்பு விஜயமங்கலம் சமணர்கோயிலின் அமைப்பினை நினைவுபடுத்துகின்றது. இராசகோபுரத்தைக் கடந்தவுடனே முன்னால் முக மண்டபம், அந்தராளம் ஆகியவற்றுடன் கூடிய விமானம் அமைந்துள்ளது. விமானம் இரண்டு தளமுடைய அஷ்டாங்க விமான அமைப்பு. நான்கு மூலைகளிலும் கர்ண கூடு விமானமும், நடுவில் நாற்புறமும் சாலா சிகர விமான அமைப்புடைய நடு அணிக் கோயில்களும் காணப்படுகின்றன. இவை அனைத்தும் சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்து காணப்படுவதால் பழைய அமைப்பைப் பின்னால் கொங்கு மன்னர்கள் காலத்தில் புதுப்பிக்கப்பட்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. விமானத்தின் சிகரப் பகுதியில் நாற்புறமும் நந்திகள் காணப்படுகின்றன. சிகரம் சதுர வடிவில் அமைந்த நாகர மரபு சிகரம். விமான அமைப்பு ஏறக்குறைய விசயமங்கலம் நாகேஸ்வரஸ்வாமிகோயிலின் அமைப்பில் காணப்படுவதால் இது கொங்குநாட்டுப் பாணியில் கொங்குமன்னர்களால் பிற்காலத்தே புதுப்பிக்கப்பட்டதே என்று தோன்றுகிறது. விமானத்தைச் சுற்றிலும் அழகிய திருச்சுற்று மாளிகை அமைந்துள்ளது. இறைவன் திருக்கோயிலுக்கு அண்மையில் தெற்குப் பார்த்த தோற்றத்தில் திருக்காமக்கோட்டம் (அம்மன் கோயில்) அமைந்துள்ளது. ஆனால் அம்மன் கோயில் பகுதி முற்றிலும் சிதைந்துவிட்டது.

மூலக்கோயிலுக்கு வடக்காகச் சிறிது தொலைவில் செல்லாண்டி அம்மன் கோயில் ஒன்று வெள்ளத்தில் முற்றிலுமாக அழிந்த நிலையில் உள்ளது. செங்கல் கொண்டு கட்டப்பட்ட இக்கோயில் பிற்காலத்தது. இக்கோயிலில் சப்தமாத்ரிசாஸ் எனப்படும் ஏழு அன்னையர்களின் சிற்பங்கள் வைக்கப்பட்டுள்ளன. ஏழு அன்னையர்களுக்கான கோயில் ஒன்றும் குடவனாற்றின் அக்கரையில் உள்ளது. இச்சிற்பங்கள் அங்கிருந்து எடுத்துவரப்பட்டனவா அல்லது விகிர்தேஸ்வரர் ஆலயத்தில் இருந்தவையா என்று தெரியவில்லை. ஆயினும் பிற்காலப் பல்லவர் முத்தரையர், ஆரம்பகாலச் சோழர்கள் காலத்தில் பெரிதும் வழக்கிலிருந்த சப்த மாதர்கள் வழிபாட்டினை நினைவுகூரத்தக்கனவாய் அக்காலப் பாணியிலே செதுக்கப்பட்ட இந்த ஏழு கன்னித் தெய்வங்களின் சிற்பங்கள் கொள்ளை அழகு வாய்ந்தவை. காணக் கண் கோடி தான் வேண்டும். இச்சிற்பங்கள் ஒன்றே வெஞ்சமாக்கூடல் கோயிலின் பழமையை நமக்குச் சுட்டிக் காட்டுவனவாக உள்ளன. கொங்கு நாட்டில் இத்தகைய ஏழு கன்னியர்கள் சிற்பங்கள் காணப்படுவது இங்குதான் முதலாவதாக இருக்கும் என்று தோன்றுகிறது. இடைக்கால கொங்குநாட்டின் சிற்பக்கலைப் பாணிக்கு இச்சிற்பங்கள் சிறந்ததோர் எடுத்துக்காட்டு. கொங்கின் பெருமையை, தனிபரசாக

விளங்கிய கொங்குமன்னரின் கலைச்சிறப்பை இச்சிற்பங்கள் காட்டு கின்றன என்றால் மிகையாகாது.

இக்கோயிலில் பல கொங்கு மன்னர்களின் கல்வெட்டுக்களும் புத்தம் புதியனவாகச் சிதைவின்றிக் காணப்படுகிறது. இவைகள் படியெடுக்கப்பட்டனவாகத் தெரியவில்லை. கொங்குமன்னர்களில் வீர ராஜேந்திரன், விக்கிரம சோழன் ஆகியவர்களின் கல்வெட்டுக்களே இவை. இன்னும் இடிபாடுகளை ஆராய்ந்தால் வேறு பல அரிய கல் வெட்டுச் செய்திகளும் கிடைக்கலாம்.

இத்தகு சிறப்பு மிக்க இக்கோயிலை இடிபாடாக அப்படியே போட்டு வைத்திருப்பது நமது சிறப்பிற்கு அழகல்ல. விரைவில் இக் கோயிலை, தொல்லியல் துறையினர் மேற்பார்வையில் கல்வெட்டுக்கள் சிதையாமல் பழுது பார்த்து, பாதுகாக்கப்பட்ட பழஞ்சின்னமாக இதனைப் போற்றிவரத் தொல்லியல் துறையினரும், தமிழ் மக்களும் முன்வருதல் அவசியம்.

நன்றி. தினமலர் 22—1—79.

---

EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Suyambunathaswamy Devasthanam, Peralam.

I had the good fortune to visit this ancient temple and have darson of Lord Suyambunatha-swamy and Goddess Bhavani The maintenance of the temple is excellant and all the punctual mithics are being correctly followed. The management deserve warm praise for the manner in which the affairs of temple are being conducted.

(S-d.) T. V Srinivasan

chief claims officer,
S. Rly., Madras.
at Peralam.

16—12—78.

# வாழ்ந்திடுவீர்

திரு. அ. நடேச தேசிகர், திருநள்ளாறு

அன்னாளில் அரசர்பலர் திருக்கோயில் மடங்கட்குப்
பொன் விளையும் நிலங்களெலாம் பூசைசெயக் கொடுத்தார்கள்
இன்னாளில் உழவர்சிலர் அந்நெல்லைக் கொடுக்காது
மன்னுசிவ பெருமானை ஏமாற்றி வருகின்றார். (1)

உங்கள்குடும் பத்தினர்கள் தருமங்கள் செயாவிடினும்
இங்குபலர் கொடுத்தசொத்தை நீங்களெடுத் துணலாமா?
பொங்குசிவ பெருமானின் கோபத்திற் குள்ளாகா(து)
இங்கிவற்கு நெல்கொடுத்து இன்பமுடன் வாழ்ந்திடுவீர். (2)

குருத்ரோகம் செய்யாது நெல்லதனைக் கொடுத்திடுவீர்!
மறுபிறப்பு எடுத்தாலும் மாளாது இச்சாபம்
திருமடங்கள் பெருந்தொண்டு செய்வதினால் நாமெல்லாம்
பெருமையொடு வாழ்கின்றோம் என்பதனை உணர்ந்திடுவீர். (3)

நல்லோர்கள் இட்டபெரும் சாபத்தால் பலகுடும்பம்
அல்லலுற்று அலைவதனை நீங்களெலாம் கண்டிலையோ?
தில்லைநட ராஜன் திருவருளைப் பெறுவதென்றால்
எல்லோரும் நெல்கொடுத்து இன்பமுடன் வாழ்ந்திடுவீர். (4)

குறைந்தஒரு குத்தகைக்கு நிலமதனைப் பெற்றீர்கள்
அரன்பூசை முட்டாது அதையேனும் கொடுத்திடுவீர்
தருமமது தலைகாக்கும் என்றதொரு பழமொழியை
மறவாது செய்திடுவீர் மாநிலத்தோர் போற்றுவர்கள். (5)

முன்னவனார் கோயில் பூசைகள் முட்டிடின்
தன்குடும்பம் அதுபோன்று தவித்திடுமே எனநினைமின்
முன்னோர்கள் வைத்தபெரும் தருமத்தை அழிக்காதீர்!
என்னாளும் வாழ்வதற்கு இறைவனருள் புரிந்திடுவன். (6)

திருக்கோயில் பணிபுரியும் மக்களெலாம் தவிக்கையிலே
ஒருகுடும்பத் தாரெல்லாம் உண்டுகளிக் கின்றீர்கள்
பெரும்பாவம் இதுஎன்று நீங்களெலாம் இனிஉணர்ந்து
அரும்பெரிய நல்வழியை அடைமின்கள் எல்லோரும். (7)

நிலமதனைக் கேட்கவில்லை நீங்களே வைத்திடுங்கள்
நிலமதனில் விளைபொருளைக் கொடுத்துதவி செய்வீர்கள்
நிலத்திற்குப் பொருள்கொடுத்து வாங்கவில்லை நாங்களெலாம்
பலபேரும் இதைஉணர்ந்தோம் இனித்தவராது நெல்கொடுப்போம்.(8)

**திருப்பணிசெய்வோர்க்கு**

இராமேச் சுரமதுரை தில்லையண் ணாமலைபோல்
அரும்பெரிய கோபுரத்தை அமைத்தார்கள் பல அரசர்
சிரியபல கோயிலெல்லாம் சிதைவுற்று இருப்பதனைப்
பெரும்பொருள்வைத் திருப்போர்கள் பணிசெய்து மகிழ்வீர்கள். (9)

நமதில்லம் பழுதுற்று இருப்பதனை நாம்கண்டு
அமைப்பதற்குப் பெரும்பாடு நாமெல்லாம் படவிலையா ?
உமைபாகன் உறைகின்ற அவ்வூரில் உள்ளவர்கள்
நமையாளும் பெருமாற்கு நற்பணியைச் செய்வீர்கள். (10)

**என்றும் இன்பம் பெருகுக.**

---

## பார்வையாளர் குறிப்பு

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

**பேரளம் ஸ்ரீ சுயம்புநாதசுவாமி தேவஸ்தானம்**

3—7—78 திங்கட்கிழமை மாலை சுமார் 7 மணிக்குமேல் அகில இந்திய நாம சங்கீர்த்தன தெய்வீக உபன்யாச யாத்திரையில் நானும் பிர்ம்மஸ்ரீ சுகப்பிரும்மம் அவர்களும் அன்பர் திரு. சிவவடிவேல் உடையார் அவர்களும் இங்கு பேரளம் ஸ்ரீசுயம்புநாதசுவாமி ஆலயத்தில் இவ்வூர் அன்பர்கள் ஏற்பாடுசெய்திருந்த நிகழ்ச்சியில் கலந்து கொண்டு பெருமகிழ்ச்சியடைந்தோம். இத்திருக்கோயில் மிகச் சுத்தமாகவும், முறையோடும் பரிபாலிக்கப்பட்டுவருவதைக்கண்டு பெருமகிழ்ச்சி அடைகிறோம்.

(S-d) N. இராஜமாணிக்கம்.

(S-d) சுகப்பிரும்மம்.

# *திருமந்திரமும், சிவஞான சித்தியாரும்

'சித்தாந்தப் புலவர் மணி'

திரு. ந. ரா. முருகவேள் M, A., M. O. L.

**முன்னுரை :**

அமிழ்தினும் இனிய நமது தமிழ்மொழியின்கண் உள்ள, தலை சிறந்த நூல்களின் வரிசையில் முன்னணியில் வைத்துப் போற்றத் தக்க, முதன்மைமிக்க நூல்களுள், திருமூலர் அருளிய திருமந்திரமும், அருள்நந்தி சிவாசாரியர் அருளிய சிவஞான சித்தியாரும் தனிப் பெருஞ் சிறப்புடையனவாகும். சைவ சித்தாந்தத் தத்துவச் செம் பொருள் நலங்களைச் சிறந்த முறையில், செவ்விதின் உணர்த்தும் நிலையில், திருமந்திரமும் சிவஞான சித்தியாரும் தந்நிகரற்று விளங்கு கின்றன.

சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் ஒன்றாகத் திருமந்திரம் திகழ்கின்றது; சித்தாந்த சாத்திரங்கள் பதினான்களுள் ஒன்றாகச் சிவஞானசித்தியார் மிளிர்கின்றது; "சிந்தைசெய்து ஆகமம் செப்ப லுற்றேனே" என்று திருமூலர் சிவாகமங்களின் பொருளையே, தமது திருமந்திரநூலில் விளக்குவதாகக் கூறுகின்றார். இங்ஙனமே அருள்நந்தி சிவாசாரியரும், "சிவாகமங்கள் சித்தாந்தமாகும்" என்று சிவாகமங்களின் பொருளையே, தாமும் தமது சிவஞான சித்தியாரில் விளக்குவதாகக் குறிப்பிட்டிருக்கின்றார். இவ்விரு நூல்களுமே தமக் கெனச் சிறந்த ஒரு தனி நடையினை உடையனவாய் அமைந்திருத்தல் பெரிதும் வியந்து போற்றத்தக்கதாக உள்ளது.

**திருமந்திரம் :**

இம்மை மறுமைக்குரிய மறைபொருள் நுட்பங்கள் அனைத்தையும் ஒருங்கெடுத்துத் திரட்டித் தெளித்துரைப்பதில், திருமந்திரம் ஒப்புயர் வற்று இலங்குகின்றது. ஓதற்கு எளிதாய், உணர்தற்கு அரிதாய் உள்ள திருமந்திரநூல், இறைமுடிவான மந்திரங்களையும், அவற்றை உருவேற்றிக்கணிக்கும் முறைகளையும், அவற்றை அமைக்கும் சக்கரங் களையும், அம்மந்திரங்களுக்கும் இயந்திரங்களுக்கும் உரிய மாபெரும்

---

* திரிசிரபுரம் சைவ சித்தாந்த சபையின் 94 ஆம் ஆண்டு விழாவில், தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்கள் தலைமையில் நிகழ்த்திய சொற்பொழிவினைத் தழுவிய சுருக்கம் (3—12—78).

தெய்வங்களையும், அத்தெய்வங்களெல்லாம் முழுமுதற் கடவுளான சிவபரம்பொருளின் ஆணைவழிநின்று தம்மைவழிபடுவார்க்கு இம்மை மறுமைப் பயன்களை அளிக்கும் வகைகளையும், தவஒழுக்கத்தின் பாகு பாடுகளையும், அவற்றை மேற்கொண்டு கடைப்பிடித்து ஒழுகும் வழி வகைகளையும், அழிவிலாப் பேரின்பப்பேரும் இறையருள் இன்ப அனுபவநலனையும் எல்லாம் ஒருங்கு தொகுத்து விளக்குகின்றது.

**சிவஞானசித்தியார் :**

இவ்வாறே சிவஞானசித்தியார் என்னும் செந்தமிழ்த் தத்துவ ஞான நூலும், "இறைவனையும், இறைவனுல் இயம்பும் நூலும், ஈண்டு அளவும் பொருளியல்பும், வேண்டும் செய்தி முறைமைகளும், பெத்த மொடு முத்தியெல்லாம் பல சமயத்துறை பலவும் கடாவிடையால் சொல்லிப் போக்கித் தர்க்கமொடு உத்தரங்களினுல் சமயம் சாதித்துத் துகள் தீர" விளக்குகின்றது. "சிவத்துக்குமேல் இல்லை தெய்வம், சிவஞான சித்திக்கு மேல் இல்லை நூல்" என்பது பழமொழி.

தமிழில் இலக்கணத்துறையில் தொல்காப்பியமும், நீதிநூற்றுறை யில் திருக்குறளும், காப்பியத்துறையில் சிலப்பதிகாரமும், பக்தித் துறையில் திருவாசகமும், வரலாற்றுத்துறையில் பெரியபுராணமும், கவிதைச் சுவைத்துறையில் கம்பராமாயணமும்போல, யோக ஞான அனுபவத்துறையில் திருமந்திரமும், தத்துவஞானத்துறையில் சிவ ஞானசித்தியாரும் ஒப்புயர்வற்றுத் தலைசிறந்து திகழ்கின்றன எனச் சுருங்கக்கூறுதல் பொருந்தும்! இத்தகைய சிறப்புமிக்க இவ்விருபெரு நூல்களையும், பலவகைகளில் நாம் ஆராய்ந்து பயன் கொள்ளுதல் கூடும். அந்நெறியில் இங்குச் சிவஞான சித்தியார், திருமந்திர நூலினை அடியொற்றி, ஆங்காங்கே பெரிதும் தழுவி அமைந்திருக்கும் தன்மையினை, இயன்ற அளவு ஒப்பிட்டு ஒரு சிறிது சுருக்கமாகக் காண்போம்.

## (1) நூற்றொடக்கம் :

சிவஞானசித்தியார் இயற்றியருளிய அருள்நந்தி சிவாசாரியர், திருமூலர் அருளிய திருமந்திரத்தில் மிகவும் ஈடுபாடு கொண்டிருந்தார் எனத் தெரிகின்றது. திருமூலர் தமது திருமந்திரநூலைத் தொடங் குங்கால், "முழுமுதல்வனுகிய இறைவன் ஒருவனே; அவன் அம்மை அப்பர் என இரண்டாக விளங்குவான் ; அவன் அவள் அது (குரு லிங்க சங்கமம் – அருவம் உருவம் அருவுருவம்) என்னும் மூன்று நிலைகளில் நிற்பான் ; சீலம் நோன்பு செறிவு அறிவு (சரியை கிரியை யோகம் ஞானம்) என்னும் நான்கையும் உணர்த்தினுன் ; பொறி வாயில் ஐந்தவித்தான் ; பதம் எழுத்து மந்திரம் கலை தத்துவம்

புவனம் என்னும் ஆறு அத்துவாக்களாகவும் விரிந்து பரந்துள்ளான். ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி சனி என்னும் ஏழு அண்டங்களுக்கும் அப்பாற்பட்டு நிற்கின்ருன்; நிலம் நீர் நெருப்பு காற்று விசும்பு நிலா பகலோன் புலனுயமைந்தன் என்னும் எண்வகையாய்ப் புணர்ந்து நின்ருன் என்று, எண் அலங்காரம் என்னும் அணி அமையத் தம் நூலைத் தொடங்குகின்ருர்.

ஒன்றவன் தானே; இரண்டவன் இன்னருள்;
நின்றனன் மூன்றினுள்; நான்குணர்ந்தான்; ஐந்து
வென்றனன்; ஆறு விரிந்தனன்; ஏழ் உம்பர்ச்
சென்றனன்; தான்இருந் தான்உணர்ந்து எட்டே.

இதனை அடியொற்றி ஆசிரியர் அருள்நந்தி சிவாசாரியரும், தமது நூலையும் எண்ணலங்காரம் பொருந்தத் தொடங்குகின்ருர். "ஒரு தந்தத்தையும், பிரணவம்போலும் இரண்டு செவிகளையும். இச்சை ஞானம் கிரியை என்னும் மும்மலங்களையும், தொங்குகின்ற (நால்) வாயினையும், ஐந்து திருக்கைகளையும் உடையவனுய், ஆறு (கங்கை) அணிந்த சடையையுடைய சிவபெருமான் அளித்தருளிய யானை முகத்தையுடைய விநாயகப்பெருமானின் திருவடிகள், அன்புடன் வணங்கி இரவுபகல் தியானித்துத் தொழுபவர்களின் மனமயக்கத் தைப் போக்கும்; அயன் திருமால் முதலியோர் வாழ்வும் ஒருபொரு ளன்று என வெறுப்பச் சிவமாம் தன்மைப் பெருவாழ்வைத் தரும்" என்னும் கருத்தமையவும், எண் அலங்காரம் பொருந்தவும் பின்வரு மாறு தமது நூலைத் தொடங்குகின்ருர்.

ஒருகோட்டன்; இருசெவியன்; மும்மதத்தன்;
நால்வாய் ஐங்கரத்தன்; ஆறு
தருகோட்டு அம்பிறை இதழித்தாழ் சடையான்
தரும்ஒரு வாரணத்தின் தாள்கள்."

## (2) நூற்பாயிரம்:

சிவஞானசித்தியாரில் பாயிரம் அமைந்துள்ள தன்மையே ஒரு தனிச் சிறப்புடன் விளங்குகின்து. தாம் அந்த நூலை யாருக்காக இயற்றினர் என்பதை ஆசிரியர் விளக்குகின்ருர். "சிவஞான சித்தியார் என்னும் இந்த ஞானநூலை, அறிவுநலம் நிறைந்தவர்களுக் காக யான் இயற்றவில்லை. ஏனெனில், அவர்கள் அறிய வேண்டுவன வெல்லாம் அறிந்தவர்கள்; அவர்கள் புதியதாக அறிந்துகொள்ள வேண்டுவது ஏதும் இல்லை. அறிவுநலம் சிறிதும் இல்லாத மூடர் களுக்காகவும் இந்நூல் இயற்றப்படவில்லை. ஏனெனில், அவர்கள் எதனையும் தெரிந்துகொள்ளும் ஆற்றலோ ஆவலோ இல்லாதவர்கள்

ஆதலின் இவ்விருவருக்கும் இடைப்பட்டநிலேயினராய், இறைவனின் அருட்பேறு எய்துதற்கு உரிய நெறி யாது? என்று அறிய விரும்பு பவர்களுக்காகவே இந்நூலே இயற்றுகின்றேன் ''

'' போதம் மிகுத்தோர் தொகுத்த பேதைமைக்கே
பொருந்திஞேர் இவர்க்கன்றிக் கதிப்பாற்செல்ல
ஏது நெறி எனுமவர்கட்கு அறிய ... ...
தேர்ந்துரைப்பன் சிவஞான சித்தி என்றே ''

என்று அருள்நந்தி சிவாசாரியர் குறிப்பிட்டருளியிருக்கின்ருர். இவர் இங்ஙனம் குறிப்பிட்டருளியமைக்கு இனியதொரு முன்ஞேடிபோல, பின்வரும் திருமந்திரப்பாடல் அமைந்திருத்தல் அறிந்து இன்புறுதற் குரியது.

அறிவிக்க வேண்டாம் அறிவற் றயர்வோர்க்கும்
அறிவிக்க வேண்டாம் அறிவுற் றுயர்வோர்க்கும்
அறிவுற் றறியாமை எய்திநிற் போர்க்கே
அறிவிக்கத் தம்மறி வார்அறி வோரே.

## (3) நூல்வகைகள் :

'' இறைவனுல் அருளிச்செய்யப்பெற்றவை வேதம், சிவாகமம் என்னும் இரண்டுமேயாம். ஏனையவெல்லாம் இவற்றின் வழிநூல், சார்புநூல், பூர்வபக்க நூல்களேயாகும். வேதம் பொதுநூல். சிவாக மங்கள் சிறப்புநூல். வேதம் உலகவர்பொருட்டும், சிவாகமம் சத்தி நிபாதர் பொருட்டும் அருளிச்செய்யப்பட்டன. வேதம் சூத்திரம் போன்றது; சிவாகமங்கள் விரிவுரைபோல்வன. வேதத்தின் கரும காண்டப் பொருள்களே விளக்குவன பூர்பவக்க நூல்கள்; வேதத்துள் கூறப்படாமல் எஞ்சிநின்ற பொருள்களேயும், வேதமுடிபாகிய உபநிட தங்களின் பொருள்களேயும் இனிது விளக்குவன ஆதலின், சிவாக மங்கள் சித்தாந்தம் எனப்படும்.'' இதனே,

வேதநூல் சைவநூல் என்றிரண்டே நூல்கள்;
வேறுரைக்கும் நூல் இவற்றின் விரிந்த நூல்கள்;
ஆதிநூல் அநாதி அம லன் தரும்நூல் இரண்டும்;
ஆரண நூல் பொது, சைவம் அருஞ்சிறப்பு நூலாம்;
நீதியினுல் உலகர்க்கும் சத்திநிபா தர்க்கும்
நிகழ்த்தியது; நீள்மறையின் ஒழிபொருள்,வே தாந்தத்
தீதில்பொருள் கொண்டுரைக்கும் நூல்சைவம்; பிறநூல்
திகழ்பூர்வம்; சிவாகமங்கள் சித்தாந்தம் ஆகும்!

எனவரும் சிவஞான சித்தியார் பாடல் தெரிவிக்கின்றது. இக் கருத்திற்கு அரண்செய்யும் வகையில் பின்வரும் திருமந்திரப்பாடல் அமைந்துள்ளன.

வேதமொடு ஆகமம் மெய்யாம் இறைவன் நூல் ;
ஓதும் பொதுவும் சிறப்பும்என் றுள்ளன ;
நாதன் உரையவை நாடில் இரண்டந்தம்
பேதமது என்பர் பெரியோர்க்கு அபேதமே.

## (4) மும்மலங்கள் :

உயிர்களை ஆணவம், மாயை, கன்மம் என்னும் மூன்று மலங்கள் பற்றியுள்ளன. ஆணவமலம் உயிர்களுக்கு அறியாமையை விளைவித்து நிற்கும். மாயாமலம் உயிர்களுக்குரிய தனுகரண புவன போகங்களைத் தோற்றுவித்துத்தரும். கன்மமலம் உயிர்களின் இன்ப துன்ப நிகழ்ச்சிகளுக்குக் காரணமாக அமையும். உயிர்களை இம்மும்மலங்களும் பற்றி நிற்கும் தன்மை, முறையே நெல்லில் உமியும் தவிடும் முளையும் பொருந்தியிருப்பது போலும். நெல் போல்வது மலங்களால் பிணிப்புண்ட உயிர் (பெத்தான்மா). நெல்லிலுள்ள உமி போல்வது, ஆணவம். உமி, அரிசியின் வடிவம் தெரியாமல் அதனை முழுவதும் மறைக்கும். அதுபோல ஆணவமலம் உயிரறிவை முழுவதும் மறைத்துநிற்கும். தவிடுபோல்வது மாயை. தவிடு அரிசியின் இயல்பைச் சிறிது விளக்கும் ; அதுபோல மாயாமலம் உயிரின் அறிவைச் சிறிது விளங்கச்செய்யும். நெல்லினின்று தோன்றும் முளை போல்வது, கன்மம். முளை தோன்றுமிடத்து அரிசியின் தன்மை விளங்காதவாறு போல, கன்ம மலமாகிய நல்வினை தீவினைகள் செய்யப்படுங்கால், உயிர் அவற்றில் மயங்கிக் கிடத்தலால், அதன் இயல்பு விளங்காது நிற்கும். நெல்லினின்று உமியும் தவிடும் முளையும் நீங்கிய நிலையில்உள்ள அரிசி போல்வது, முறையே ஆணவம் மாயை கன்மம் என்னும் மும்மலங்களும் நீங்கித் தூய்மை அடைந்து வீடு பேறு எய்திய நல்லுயிர் ( முத்தான்மா ). இவ்வுண்மையினை,

“ மும்மலம் நெல்லி னுக்கு
முளை யொடு தவிடுமிப்போல்
மம்மர்செய்து அணுவின் உண்மை
வடிவினை மறைந்து நின்று,
பொய்ம்மைசெய் போக பந்த
போத்திருத் துவங்கள் பண்ணும்......”

எனவரும் சிவஞானசித்தியார் செய்யுள், இனிது விளக்கிக் கூறுகின்றது. இக்கருத்திற்கு அடிப்படையும் சான்றுமாகப் பின்வரும் திருமந்திரப் பாடல் விளங்குகின்றது.

ஆணவம் மாயையும் கன்மமும் ஆம்மலம்
காணும் முளைக்குத் தவிடுமி ஆன்மாவும்
தாணுவை ஒவ்வாமல் தண்டுலமாய் நிற்கும்
பேணுவாய் மற்றுநின் பாசம் பிரித்தே.

(5) குருவருள் :

உயிர்களுக்குக் குருவின் அருள் இன்றியமையாதது. இருளை அருளாற் போக்குபவனே குரு (கு - இருள் ; ரு - அருள்) எனப்படுவான். குருவருள் இன்றித் திருவருள் இல்லை. இறைவனின் அருளை நாம் நேரே பெற முடியாது. குருவின் மூலமாகத்தான், நாம் இறையருளைப் பெறமுடியும் ; நம்மைப் பற்றியுள்ள மலங்களைப் போக்கிக் கொள்ளமுடியும். மலம் பஞ்சு போன்றது ; எரிக்கத்தக்கது. இறைவன் சூரியனைப்போன்றவன்; இறைவன் நமக்கு எட்டாதநிலையில் தொலைவில் உள்ளான். சூரியன் தானே நேராகப் பஞ்சை எரிக்க முடியாது. சூரியகாந்தக் கல்லின் வழியாகவே சூரியன் பஞ்சை எரிக்கமுடியும். எனவே சூரியகாந்தக்கல், குருவைப்போன்றது. சூரியகாந்தக்கல் சூரியனின் வெப்பத்தைத் தன்பால் ஏற்கத்தக்கது. அதுபோலக் குரு, இறைவனின் அருளைத் தன்பால் தேக்கி நிற்பவன். சூரியகாந்தக் கல்லின் வாயிலாகவே, சூரியனின் வெப்பம் ஊடுருவி நின்று, பஞ்சை எரிக்கும். அதுபோலக் குருவின் வாயிலாகவே, இறைவனின் திருவருள், உயிர்களின் மும்மலங்களைப் போக்குதல் இயலும். குருவின் உதவியின்றி இறைவன் உயிர்களுக்கு நேரேஅருள்செய்தல் இயலாது. சூரியன், இறைவன். சூரியனின் வெப்பம் அல்லது நெருப்பு, திருவருள். சூரியகாந்தக்கல், குரு. பஞ்சு, எரிக்கத்தக்க மும்மலங்கள் என்று உவம உவமேயங்களை விரித்துணர்ந்துகொள்ளுதல் வேண்டும். இச்சிறந்த கருத்தினை,

" சூரிய காந்தக் கல்லின் இடத்தே செய்ய
சுடர்தோன்றி யிடச்சோதி தோன்றுமாபோல்
ஆரியனும் ஆசான்வந் தருளால் தோன்ற
அடிஞானம் ஆன்மாவில் தோன்றும்......"

எனச் சிவஞான சித்தியார் தெளிவுறக் கூறுகின்றது. இச்சித்தியார் செய்யுளுக்குப் பின்வரும் திருமந்திரப் பாடலே, மூலமும் முதலும் ஆகும் எனலாம்.

சூரிய காந்தமும் சூழ்பஞ்சும் போலவே
சூரிய காந்தமும் சூழ்பஞ்சைச் சுட்டிடா;
சூரியன் சந்நிதி யிற்சுடு மாறுபோல்
ஆரியன் தோற்றமுன் அற்ற மலங்களே.

(தொடரும்)

# தெரிந்துகொள்ளுங்கள்

---

[ மலர் 38, இதழ் 2 பக்கம் 58 இன் தொடர்ச்சி ]

7. தூபக்கால்கள், தீபங்கள், நைவேத்திய பாத்திரங்கள் ஒருபோதும் இரும்பினுல் ஆனதாக இருக்கக்கூடாது. அப்படி இருந்தால் நாம்செய்யும்பூஜை தேவதைகளுக்குக்கிடைக்காமல் அசுரர்களுக் குக் கிடைத்துவிடும். எவர்சில்வரில் இரும்பு கலப்பு உண்டு. எனவே எவர்சில்வர் பாத்திரத்தில் நைவேத்தியங்களை வைத்து நிவேதனம் செய்யக்கூடாது. இதுபோல் தீபங்களும் எவர்சில்வரில் இருக்கக் கூடாது.

8. இறைவனுக்குத் தூபம் காண்பிக்கும்போது இறைவனின் முகத்திற்கு நேராக ஒருபோதும் காட்டக்கூடாது. முகத்திற்கு நேராகத் தூபம் காண்பிப்பவன் "அந்ததம்ஸ்" என்ற நரகத்தில் தள்ளப்படுகிருன். எனவே தூபத்தை இறைவனின் நாபிக்கு நேராகவோ. பாதத்திற்கு நேராகவோதான் காண்பிக்கவேண்டும்.

9. பூஜையின்போதோ, ஜபத்தின்போதோ அல்லது வேறு எந்த ஸ்தோத்திரங்கள் படிக்கும்போதோ ஆசனமின்றித் தரையில் உட்கார்ந்துசெய்தால் பயன் இன்றிப் போய்விடும். எனவே ஆசனத்தில் அமர்ந்துகொண்டுதான் செய்யவேண்டும்.

10. இறைவனுக்கு நிவேதனம் செய்யும்போது நைவேத்தியங்களுக்குப் புஷ்பம்போட்டுச் செய்யவேண்டும். புஷ்பம் போடப்பட்டுள்ள நைவேத்தியம் சுவாமிக்கே; இராக்ஷஸர்களுக்கு அல்ல என்பதை இது உணர்த்துகிறது.

11. இறைவனுக்குப் புஷ்பத்தைத் தலைகீழாகச்சாத்தக்கூடாது. ஒவ்வொருமூர்த்திக்கும் அதனதன் 12" உயரம்வரை ஸாந்நித்யம் வியாபித்து இருக்கின்றன. புஷ்பத்தைத் தலைகீழாகச்சாத்தும்போது ஸாந்நித்யத்தை இழந்து புஷ்பத்திற்குப் பலனின்றிப்போய்விடுகிறது.

12. "த்ரிமது" என்பது (பசுவின்) நெய், தேன், பால் இவைகள்தாம். இளநீரும் தேனும் சேர்ந்தது அல்ல. "த்ரிமது" நிவேதனம் செய்வதால் (1) ரோஹநிவர்த்தி. (2) தோஷபரிஹாரம். (3) ஐசுவர்யம் உண்டாகின்றன.

தொகுத்தவர் :— திரு. ச. நடராஜன்,
போஸ்ட்மாஸ்டர்,
பழையகூடலூர், தஞ்சைமாவட்டம்.

**மதிப்புரை :**

## இந்துசமய நாள் வழிபாடு

கோவையிலுள்ள பல நிறுவனங்களிலும் பொறுப்பான அங்கம் வகித்து அறப்பணிகள்செய்துவரும் திரு. வீகோ. வீரண்ணசெட்டியார் அவர்களால் எழுதி வெளியிடப்பெற்றது. மூர்த்திகளுக்குரிய மந்திரங்கள், நித்திய கர்மங்கள், வழிபாட்டுப் பாடல்கள், கடைப்பிடிக்க வேண்டிய கொள்கைகள் ஆகியன இதில் இடம் பெற்றுள்ளன. விநாயகர், முருகன், இடபாரூடர், திருமகள், கலைமகள், திருமால் ஆகியோர்களின் திருவுருவப்படங்களும் நூலுக்கு அழகுசெய்கின்றன. கிரௌன் 1×32. பக்கங்கள் 60. வேண்டுவோர்:- 'வீகோ' வில்லா 89. ரங்கேகவுண்டன்வீதி. கோவை-1. என்ற ஆசிரியர் முகவரிக்கு எழுதிப்பெறலாம்.

## ஸ்ரீ சங்கரஜயந்தி மலர்

தெய்வபக்தியும் குருபக்தியும் மக்களிடையே பரவச் சென்னை மேலமாம்பலம் ஸ்ரீ சங்கர பக்த ஜன சபா செய்துவரும் பணிகள் பல திறத்தன. குறைந்த விலையில் நல்ல நூல்களை அழகிய பதிப்பாக வெளியிடுவதும் அப்பணிகளுள் ஒன்று. அந்தவகையில் இப்போது சங்கரஜயந்தி மலர் வெளிவந்துள்ளது. கணபதி முதலிய மூர்த்திகளின் வடமொழித் தோத்திரங்கள் (உரையுடன்), அஷ்டகங்கள், அருள்மொழிகள், பஞ்சாக்ஷரமும் பஞ்சாக்ஷரனும், நித்தியதர்மங்கள், அம்மை வழிபட்ட தலங்கள், ஆற்காட்டின் வரலாறு, சில உபநிடத விளக்கங்கள், ருத்ரமகிமை, செங்கை மாவட்டத்திலுள்ள அருள் வழங்கும் ஆலயங்கள், ஊழ்வினைகள் உள்ளிட்ட நாற்பத்தொன்று தலைப்புக்களில் சிறந்த அறிஞர்களால் எழுதப்பெற்ற பலதிறக்கட்டுரைகள் இதில் அடங்கியுள்ளன. சில சோதிடக் கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன. இத்தகைய ஒரு தொகுப்பு மலர் சிவபுராணச் சக்கரவர்த்தி ஆங்கீரஸ ஸ்ரீ வேங்கடேசசர்மா அவர்கள் அரிய முயற்சியால் வெளிவந்திருப்பது அறிஞர்களால் பாராட்டப்படுவதாகும். மிக அழகான பதிப்பு. கிரௌன் 1×16. பக்கங்கள் 344. விலை ரூ. 5. தபாற் செலவு தனி. வேண்டுவோர் :- 5. டெலிபோஸ்ட்காலனி, குறுக்குத்தெரு, மேலமாம்பலம். சென்னை - 600033 என்ற முகவரிக்கு எழுதிப் பெறுக.



# செய்திகள்

## திருப்பொன்னூசல் திருவிழா

**வேளூரில் :**

தருமையாதீனத்திற்குச் சொந்தமான வேளூர் ஸ்ரீ வைத்தியநாத சுவாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ தையல்நாயகி உடனுகிய ஸ்ரீ வைத்திய நாதசுவாமிக்கு 3—1—79 புதன்கிழமை முதல் பத்துநாட்கள் திருப் பொன்னூசல் திருவிழா சிறப்பாக நடைபெற்றது. இந்நாட்களில் பெருமானையும் பெருமாட்டியையும் ஊஞ்சலில் எழுந்தருளச்செய்து சிறப்பாக வழிபாடு நிகழ்த்தப்பெற்றது. இரவில் மணிவாசகர் அருளிய திருவெம்பாவைப் பாடல்கள் ஓதுவாமூர்த்திகளால் ஓதப்பெற்றன. 12—1—79 அன்று திருவாதிரைத் திருநாளாதலின் ஸ்ரீ நடராஜப் பெருமானுக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகளும் தரிசனமும் சிறப் பாக நடைபெற்றன. உள்ளூர் வெளியூர் பக்தர்கள் வழிபட்டுப் பயன் பெற்றனர்

**சீகாழியில் :**

தருமையாதீனத்திற்குச் சொந்தமான சீகாழி ஸ்ரீ சட்டைநாத சுவாமி தேவஸ்தானத்தில் 3—1—79 முதல் பத்துநாட்கள் ஊஞ்சல் திருவெம்பாவை உற்சவம் சிறப்பாக நடைபெற்றது. இந்நாட்களில் திருமுறைகள் திருக்காப்பிடப்பெற்று, திருவெம்பாவைப் பாடல்கள் மட்டும் ஓதப்பெறுவது வழக்கம். நாள்தோறும் இரவில் சுவாமி அம்பாள் பிராகாரத்தில் வலம்வருதலும், காலை மாலை இருவேளைகளி லும் பிராகாரத்தில் மணிவாசகப்பெருமான் வலம்வருதலும், பின்னர் ஓதுவாமூர்த்திகள் திருவெம்பாவைப் பாடல்களை ஓத, தீபாராதனைகள் நிகழ்த்தப்பெற்றன. 11—1—79 அன்று இரவு திருவாசகத்தின் ஒரு பகுதியாகிய திருப்பொன்னூசல் ஓதப்பெற்று, தீபாராதனைகள் நிகழ்த் தப்பெற்றன. 12—1—79 அன்று திருவாதிரைத் திருநாளாதலின் ஸ்ரீ நடராசப்பெருமான் திருவீதியுலாவும் நிகழ்ந்தது.

## ஆயில்யத்திருநாள் ஆலய வழிபாடு

தருமையாதீனம் இருபத்தாருவது குருமகாசந்நிதானம் அவர்கள் மாதஜன்மநட்சத்திரமாகிய ஆயில்யத்திருநாள் வழிபாடு 15—1—79

திங்கட்கிழமை காலை திருக்குடந்தைக்கீழ்க்கோட்டம் அருள்மிகு நாகேசுவரர் ஆலயத்திலும், நண்பகலில் திருக்குடந்தைக்காரோணம் அருள்மிகு சோமேசர் ஆலயத்திலும், மாலையில் திருக்குடமூக்கு அருள்மிகு கும்பேசுவரர் ஆலயத்திலும் விசேஷ அபிஷேக ஆராதனை களுடன் சிறப்பாக நடைபெற்றது. வழிபாட்டின்போது திருபுவனம் தேவஸ்தானம் திருமுறைப்பணியாளர் திரு. S, தண்டபாணி தேசிகர் அவர்களால் திருப்பதிகப் பாராயணம் நிகழ்த்தப்பெற்றது. " திருக் குடந்தைத் தலப்பதிகங்கள் " அடங்கியநூல் வெளியிட்டு வழங்கப் பெற்றது.

மாலை 6 மணி அளவில் அருள்மிகு கும்பேசுவரர் ஆலயத்தில் சமய விரிவுரைகள் நிகழ்த்தப்பெற்றன. குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டச் செயலாளர், திரு. S. சுந்தரேசஞ்செட்டியார் B. A., L. T, அவர்கள் வரவேற்புரைக்குப்பின்னர், குடந்தைச் சிவனடியார் திருக் கூட்டத் தலைவர் திரு. P. T S. சிங்காரஞ்செட்டியார் அவர்கள் தலைமையில், தருமையாதீனப் பல்கலைக் கல்லூரிப் பேராசிரியர், வித்துவான். திரு. மு. சிவச்சந்திரன் M. A. அவர்கள் "இறைவழிபாடு" என்ற தலைப்பிலும், தருமையாதீனம் சமயப் பிரசாரகர் திரு. கோ. சிவஞானம் அவர்கள் 'தலச்சிறப்பு" என்ற தலைப்பிலும் விரிவுரை ஆற்றினுர்கள். அன்பர்கள் பலர் வழிபாட்டில் கலந்துகொண்டு வழிபட்டுப் பயன்பெற்றனர்.

## திருக்கடவூரில் அபிராமிபட்டர் அருள்பெறு திருநாள்

தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருக்கடவூர் அருள்மிகு அபிராமியம்மை உடனுகிய அருள்மிகு அமிர்தகடேசுவரர் திருக் கோயிலில் அபிராமிபட்டர் அருள்பெறு திருநாள் இரண்டாவது ஆண்டு மகந்நியாச பூர்வக ஏகாதச ருத்ராபிஷேகத்துடன் சிறப்பாக நடைபெற்றது. அபிராமிபட்டர் அம்மை அருள்பெற்ற திருநாள் தை அமாவாசைத் திருநாள். இவ்வாண்டு 28—1—79 ஞாயிற்றுக் கிழமை தை அமாவாசை அர்த்தோதய புண்ணியகாலம் ஆதலின் அன்று அருள்மிகு அபிராமியம்மை உடனுகிய அருள்மிகு அமிர்த கடேசுவரருக்கு மகந்நியாச பூர்வக ஏகாதச ருத்ராபிஷேகமும், அலங் கார ஆராதனைகளும் மதுரை சிவகாமி மில் அதிபர் திரு. கருமுத்து. சு. சொக்கலிங்கஞ் செட்டியார் அவர்களின் உபயமாகச் சிறப்பாக நடைபெற்றது.

சுந்தரர் நெல்மலை பெற்றபோது அருளிய 'நீள நினைந்தடியேன்' என்ற திருப்பதிகத்தையும் திருஞானசம்பந்தர் உலவாக்கிழி பெற்ற போது பாடியருளிய 'இடரினும் தளரினும்' என்ற திருப்பதிகத்தை யும், கோளறு திருப்பதிகத்தையும் திருமுறைப் பண்ணிசைவாணர்கள்

பதினொருமுறை பாராயணம்புரிந்தனர். மாலையில் அருள்மிகு அபிராமி அம்மை சந்நிதியில் 'அபிராமி அந்தாதி' பாராயணம் நிகழ்த்தப் பெற்றது. அன்று ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றி அன்பர்களுக்குப் பிரசாதம் வழங்கி ஆசியருளினார்கள்.

## வேளூரில் தைச்செவ்வாய்த் திருவிழா

தருமையாதீனத்திற்குச் சொந்தமான வேளூர் ஸ்ரீ வைத்தியநாத சுவாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமிக்குத் தைச் செவ்வாய்த்திருவிழா 28—1—79 முதல் தொடங்கி 6—2—79 வரை மிகச் சிறப்பாக நடைபெற்றது. இவ்விழா தைமாதத்தில் கடைசிச் செவ்வாய்க்கிழமையைத் தீர்த்தத்திருநாளாகக் கொண்டுபத்துநாட்கள் நடைபெறுவது. இந்நாட்களில் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரப்பெருமான் திருவீதிக்கு எழுந்தருளி அன்பர்களுக்கு அருள்வழங்கும் காட்சி கண் கொள்ளாக் காட்சியாகும். 4—2—79 அன்று திருத்தேர்த்திருநாள். புஷ்பத்தேரில் பெருமான் திருவுலாக்கொண்டருளும் காட்சி நிகழ்ந்து பல ஆண்டுகளாயின. இவ்வாண்டு புஷ்பத்தேரில் ஸ்ரீ செல்வமுத்துக் குமாரப்பெருமானைப் பவனிவரச்செய்யவேண்டும் என்று அன்பர்கள் பலர் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களிடம் தெரிவித்துக்கொண் டனர். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களும் திருவுளமிசைந்து புஷ்பத்தேர் பவனிக்கு உத்தரவிட்டருளினார்கள். ஸ்ரீ செல்வமுத்துக் குமாரப்பெருமான் புஷ்பத்தேரில் திருவுலாவர ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளிப் புஷ்பத்தேரில் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரப் பெருமானைத் தரிசித்து அன்பர்களுக்கு அருட்பிரசாதம் வழங்கியருளி னார்கள். பல்லாயிரக்கணக்கான பக்தர்களும் வந்து வழிபட்டுப் பயன் பெற்றனர். திருவிழாநாட்களில் அறிஞர்கள் பலர் முருகப்பெருமான் அருள்நூல்கள்பற்றி விரிவுரையாற்றினார்கள்.

## ஸ்ரீ தாயுமான சுவாமிகள் குருபூஜை விழா

தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருச்சி மலைக்கோட்டை மௌன மடத்தின் சார்பில் ஸ்ரீ மௌனகுருவிற்கும் ஸ்ரீ தாயுமான சுவாமிகளுக்கும் தைமாதம் 7 ஆம் நாள் (22—1—79) திங்கட் கிழமையன்று திருச்சி மௌனமடத்தில் குருபூஜை விழா சிறப்பாக நடத்தப்பெற்றது. அன்றுகாலை 9-30 மணியளவில் மலைக்கோயில் ஸ்ரீ மாணிக்கவிநாயகருக்கும் ஸ்ரீஉச்சிப்பிள்ளையாருக்கும், ஸ்ரீமட்டுவார் குழலம்மை உடனுறை ஸ்ரீ தாயுமான சுவாமிக்கும், ஸ்ரீ மௌனகுரு விற்கும், ஸ்ரீ தாயுமானவருக்கும் அபிஷேக ஆராதனைகள் சிறப்பாக நடத்தப்பெற்றன. நண்பகல் 12 மணியளவில் மௌன மடத்தில் குருபூஜை வழிபாடு செய்யப்பெற்றது. பின்னர் மாகேசுவரபூஜையும் நடைபெற்றது.

(தொடர்ச்சி 144 ஆம் பக்கம் பார்க்க)

# எதிர்காலம்

ஜோதிஷம் திரு. A. இராசமாணிக்கம்

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.

**காளயுக்திஷு மாசிமீ 1உ முதல் 30உ முடிய.**

**( 13—2—79 முதல் 14—3—79 முடிய )**

ஸ்ரீ காளயுக்தி ஷு தைமாதம் 30உ சோமவாரம் மகநக்ஷத்திரம் கௌலவகரணம் கூடிய காலத்தில் சூர்யோதயம் முதல் 48 நாழிகை 14 வினடிக்கு விருச்சிக லக்னத்தில் ஸ்ரீ லோகரட்சகரான சூரிய பகவான் மகர ராசியிலிருந்து கும்ப ராசி சங்கிரமணமாக மாசிமாதப் பிரவேசம் செய்கிருர். அன்று சிம்மச்சந்திரன் நாழிகை 9 வினடி 29. மறுதினம் மங்களவாரம் மாசிமாதம் முதல்தேதி விஷ்ணுபதி புண்ய காலமாகும். சங்கிரம கால கிரகஸ்திதியின் பலனவது லோகத்தில் சர்வஜனங்களுக்கும் உய்வுஏற்படும். லோகமாந்தர்கள் அறிவுதீட்சண யத்துடன் தொழில் துறைகளில் முன்னேற்றமடைவர். தேசத்தின் பொருளாதாரம் விருத்தியடையும். தேசத்தலைமை பீடத்தில் உள்ள உத்தம நல்லோர்களால் தர்மநெறி நீதிபரிபாலனம் நன்ருக நடந்து வரும். உலகிலுள்ள திருமடங்கள் ஆசாரியபீடங்களில் பூர்வபுண்ணிய பலனய் உயர்ந்துவந்து சிவராஜ யோகத்தில் பிரகாசிக்கின்ற நித்தியம் சிவார்ச்சனைபுரிகின்ற சிவாக்ருஷ்ண திருக்கரங்களையுடைய ஞானகுரு மகான்கள் லோகத்திற்கு நன்னெறி போதித்து ஆசியருளுவதால் தேசங்களில் க்ஷேமம் நிலவும். செங்கோல் உயர்ந்து தழைக்கும். தேவாலயங்களில் நித்தியம் ஆறுகால பூசைகள் நடைபெற்றுவரும். லோகப்பிரஜைகள் தம் குல ஆசாரியர்கள்மூலம் ஸ்ரீ பஞ்சாட்சர மகிமையை உணர்ந்து, ஓதி, சிவநேயச்செல்வர்களாக உயர்வர்.

## சந்திர கிரஹணம்

குறிப்பு :— ஸ்ரீ காளயுக்திஷு மாசிமீ 29உ மங்களவாரம் பௌர்ணமி, பூரம் 4ஆம்பாதம் உத்திரம் முதல்பாதம் இதில் சம்பவிக்கும் இராகுகிரஸ்த பிசங்கவர்ண பார்சுவ சோமோபராக புண்யகாலம். சௌம்யபர்வா எங்கும் இந்தியஸ்டாண்டர்டு மணிப்படி ஸ்பரிசம் இரவு மணி 12-59, மத்தியம் இரவு மணி 2-38, மோக்ஷம் இரவு மணி 4-17, ஆதியந்தம் 3 மணி 18 நிமிஷம்.

பிரமாணவீசம் சுமார் 14. சந்திரமண்டலம் உத்தர துருவாபி மூக நேமியிலிருந்து கிழக்கே 141 டிகிரியில் ஸ்பரிசம், மேற்கே 104 டிகிரியில் மோக்ஷம்.

பௌர்ணமி சிரார்த்தம் அன்று செய்யலாம். பகல் மூன்று ஜாமத்துக்குமேல் போஜனம் கூடாது.

மகம், பூரம், உத்திரம், கார்த்திகை, உத்திராடம், பரணி, பூராடம் நக்ஷத்திரங்களில் பிறந்தவர்கள் சாந்தி செய்துகொள்ளுதல் வேண்டும்.

**1. மேஷம் :- அசுவதி - பரணி – கார்த்திகை ¼**

**( சு. சே. சோ. லா. - லி. லு. லே. லோ. - அ. )**

மேஷராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். தனாதி சௌகரியங்களில் நல்ல நிலைமையாக இருந்துவரும். சகோதரர் பந்து அம்மான்கள் விசுவாசமாக இருந்துவருவர். வித்துவத்துவத்தில் மேன்மைஸ்திதி ஏற்படும். பூமியயந்திரங்களில் நற்பலன்வந்துசேரும். எல்லாக்காரியங்களும் வெற்றிகரமாகச் செயல்பட்டுக்கொண்டிருக்கும். மாசிமீ 7உ 17நாழிகை 32விநாடிமுதல் 9உ 29 நாழிகை 11 விநாடி வரையில் சந்திராஷ்டமம். வியாழன் வெள்ளி சுபமாகும்.

**2, ரிஷபம் :- கார்த்திகை ¾ - உரோகிணி – மிருகசீர்ஷம் ½**

**( இ. ஊ. ஏ. - ஓ. வ. வி. வூ - வே. வோ. )**

ரிஷபராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். குடும்பாபி விருத்தியில் தன தானியவருமானங்கள் மிகுந்துவரும். ஸ்திரிவழி பூ பொருளில் நற்பயன்வரும். புத்திரர்கள் இராசாங்க செல்வாக்குடன் இருந்துவருவர். எல்லாக்காரியங்களும் ஜெயபிரதாபத்துடன் நடைபெற்றுவரும். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். மாசிமீ 9உ 29 நாழிகை 11 விநாடிமுதல் 11உ 36 நாழிகை 58 விநாடிவரையில் சந்திராஷ்டமம். சனி ஞாயிறு சுபமாகும்.

**3. மிதுனம் :- மிருகசீர்ஷம் ½ - திருவாதிரை – புனர்பூசம் ¾**

**( கா. கி. - கு. க. ங. ச்சா. - கே. கோ. ஹ. )**

மிதுனராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பண வருமானங்கள் மதிப்பாக வந்துகொண்டிருக்கும். சகோதரர் பிதா இவர்களின் மனவிகல்பம் வந்து உடன் சரிபடும். வீடு வாகனப் பிராப்தியில் சௌகரியம் மேலாக இருந்துவரும். வித்தியா வியாபாராதி கலைத்துறைகளில் 14உக்கு மேல் நன்மை ஏற்படும். மாசிமீ 11உ 36 நாழிகை 58 விநாடி முதல் 13உ 42 நாழிகை 50 விநாடி வரையில் சந்திராஷ்டமம். திங்கள் செவ்வாய் சுபமாகும்.

**4. கடகம் :- புனர்பூசம் $\frac{1}{4}$ – பூசம் – ஆயில்யம்.**

( ஹி. - ஹு. ஹே. ஹோ. ட. - டி. டு. டே. டோ. )

கடகராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபி விருத்தியில் கௌரவ நிலைமையில் பண வருமானங்கள் வந்து கொண்டிருக்கும். முக்கிய விஷயங்களில் முன்வழிகாட்டியாய் பிரவேசித்து நடத்தும் ஆற்றலைத்தரும். காலில் இரத்தக்கட்டு வந்து குணமாகும். ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிக்கு அருச்சனைசெய்ய நலம் தரும். தாரபுத்திரர்கள் நலமாக இருந்துவருவர். மாசிமீ 13உ 42 நாழிகை 50 வினுடி முதல் 15உ 49 நாழிகை 17 வினுடி வரையில் சந்திராஷ்டமம். வியாழன் வெள்ளி சுபமாகும்.

**5. சிம்மம் :- மகம் - பூரம் – உத்திரம் $\frac{1}{4}$**

( ம. மி. மு. மே. - மோ. ட. டி. டு. - டே. )

சிம்மராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடந்துவரும். குடும்பாபி விருத்தியில் பணவருமானங்களுக்கு ஏற்பச் செலவுகளும் ஏற்பட்டுக் கொண்டிருக்கும். சகோதரர்களின் சௌகரியம் நன்ருக இருந்துவரும். வீடு வாகன பிராப்தியில் முதலீடு செய்தலாகும். புத்திரர்கள் சௌக்கிய மேன்மையில் இருந்துவருவர். மனைவிக்குச் சிரோபாதை நலிவு வந்து உடன் குணமாகும். மாசிமீ 15உ 19 நாழிகை 17 வினுடி முதல் 17உ 58 நாழிகை 29 வினுடி வரையில் சந்திராஷ்டமம். சனி ஞாயிறு சுபமாகும்.

**6. கன்னி :- உத்திரம் $\frac{3}{4}$ - ஹஸ்தம் - சித்திரை $\frac{1}{2}$**

( டோ. ப. பி. - பு. ஷ. ண. ட. - பே. போ. )

கன்னியாராசி 9 பாதங்களும் சுபபலன் தரும். குடும்பாபிவிருத்தியில் மேன்மேலும் பண வருமானத்தை ஏற்படுத்திவரும். வித்தியா வியாபாராதிகளில் மாதமுதலில் நற்பலன் வந்துசேரும். பெற்ருேர் நலம் நன்ருக இருந்துவரும். எல்லாக்காரியங்களிலும் ஜெயப்பிராப்தியாகும். அரசாங்கநன்மை ஏற்படும். தாரபுத்திரர்களின் நலம் நன்ருக இருந்துவரும். மாசிமீ 17உ 58நாழிகை 29வினுடி முதல் 20உ 12நாழிகை 36 வினுடி வரையில் சந்திராஷ்டமம். திங்கள் செவ்வாய் சுபமாகும்.

**7. துலாம் :- சித்திரை $\frac{1}{2}$ – சுவாதி – விசாகம் $\frac{3}{4}$**

( ர. ரி. - ரு. ரே. ரோ. தா. - தி. து. தே. )

துலாராசி 9 பாதங்களும் சுமார் பலனுக நடந்துவரும். தன வருமானங்கள் சீராக வந்துகொண்டிருக்கும். ஒப்பந்த லேவாதேவிகளில் அதிருப்தியான சூழ்நிலையாகத்தோன்றிவரும். மாதப்பின்பகுதியில் திருப்தியான பலன் தரும். வீடு வாகனுதிகளின் சௌகரியங்கள்

நன்ருக இருந்துவரும் ஞாயிற்றுக்கிழமையில் சூரியார்ச்சனை செய்வதால் அலைச்சல் நீங்கும். வழக்குகளில் சாதகபலன்காணும். மாசிமீ 20உ 12 நாழிகை 36 வினடி முதல் 22உ 32 நாழிகை 44 விநடி வரையில் சந்திராஷ்டமம். புதன், வியாழன் சுபமாகும்.

**8. விருச்சிகம் :- விசாகம் $\frac{1}{4}$ - அனுஷம் - கேட்டை.**

(தோ. - ந. நி. நு. நே. - நோ. ய. யி. யு.)

விருச்சிகராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். பண வருமானங்கள் திருப்தியாகவே வந்து கொண்டிருக்கும். வித்தியா வியாபாராதிகளில் கலைத்துறையில் மாதமுதலில் நல்ல கீர்த்தியை யளிக்கும். ஒவக்குமேல் இதயவலி போன்ற இரத்தாதிக்க நலிவு ஏற்பட்டு உடன்குணமாகும். எல்லாக்காரியங்களும் புத்தி சாதுரியத்தினுல் சிறப்பாக நடந்துகொண்டிருக்கும். தாரபுத்திரர்களின் நலம் நன்ருக இருந்துவரும். மாசிமீ 22உ 32 நாழிகை 44 விநடி முதல் 24உ 58 நாழிகை 39 விநடி வரையில் சந்திராஷ்டமம். வெள்ளி சனி சுபமாகும்.

**9. தனுசு :- மூலம் - பூராடம் - உத்திராடம் $\frac{1}{4}$**

(யே. யோ. பா. பி. - பு. த. ப. ட. - பே.)

தனுர்ராசி 9 பாதங்களுக்கும் பணவருமானம் கண்யமாக வந்து கொண்டிருக்கும். சகோதரர் நலம் சாதாரணமாக இருந்துவரும். வித்தியா வியாபாராதி கலைத்துறைகளில் மந்தமாகத் தோன்றினும் மாதப்பின்பகுதியில் சிலாக்கிய பலன் ஏற்படும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். மாசிமீ 24உ 58 நாழிகை 39 விநடி முதல் 27உ 27 நாழிகை 43 விநடி வரையில் சந்திராஷ்டமம். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

**10. மகரம் :- உத்திராடம் $\frac{3}{4}$ - திருவோணம் -அவிட்டம் $\frac{1}{2}$**

(போ. ஜ. ஜி. - கி. கு. கே. கோ. - கா. கி.)

மகரராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுகநடக்கும். குடும்பாபிவிருத்தியில் பணவருமானம் போஜன சௌக்கியம் திருப்தியாகவே இருந்துவரும். குடும்பத்தாரிடையே சில சந்தர்ப்பங்களில் சர்ச்சை ஏற்படுத்தும். உடன் சுமுகமாவதும் ஆகும். வீடு வாகனப்பிராப்தியில் செலவுடன் சௌகர்யமும் ஏற்படும். புத்திரர்கள் பிரபலஸ்திதியில் இருந்து வருவார்கள். வியாஜ்ஜிய வழக்குகளில் ஜெயம் ஏற்படும். மனைவி நலம் நன்ருக இருந்துவரும். 1, 2, 28, 29 தேதிகளில் சந்திராஷ்டமம். புதன் வியாழன் சுபமாகும்.

**11. கும்பம் :- அவிட்டம் ½ – சதயம் - பூரட்டாதி ¾**

(கு, கே. - கோ. ஸ. ஸி. ஸு. - ஸே. ஸோ. தா.)

கும்பராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பண சௌகர்யம் பூர்வசொத்து பிராப்தியில் நல்ல அனுபோகங்கள் இருந்துவரும். சகோதரருக்கு நன்மையை ஏற்படுத்தும். தேகம் உஷ்ணாதிக்கத்தினால் பாதித்து உடன் குணமாகும். புத்திரனின் கல்வி, தொழில் துறைகளில் 14உக்குமேல் மேன்மை ஏற்படும். மாசிமீ 3, 4, 30தேதிகளில் சந்திராஷ்டமம். வெள்ளி சனி சுபமாகும்.

**12. மீனம் :- பூரட்டாதி ¼ – உத்திரட்டாதி – ரேவதி.**

(தி. - து. ஸ. ச. த. - தே. தோ. ச. சி.)

மீனராசி 9 பாதங்களும் மிச்சிர பலனாக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பணம் வரவும் செலவும் சரிசமனாக இருந்துவரும். சகோதரர் நலம் நன்றாக இருந்து வரும். பந்து அம்மான் இவர்களின் நலனுக்கு அதிக ஈடுபாடுகள் ஏற்படும். வித்துவத்துவம் கலைத் துறையில் பிரபலஸ்திதியை உண்டாக்கும். மாதப் பின்பகுதியில் எல்லாவகையிலும் நற்பலப்பிராப்தியாக இருந்துவரும். மாசிமீ 5உ 0-15 வினாடி முதல் 7உ 17 நாழிகை 32வினாடி வரையில் சந்திராஷ்டமம். செவ்வாய் புதன் சுபமாகும்.



---

(139 ஆம் பக்கத் தொடர்ச்சி)

இரவு 7 மணியளவில் ஸ்ரீதாயுமானசுவாமி திருக்கோயில் நூற்றுக்கால் மண்டபத்தில் திருச்சி, முத்தமிழ்க்காவலர், கலைமாமணி, திரு. கி. ஆ பெ. விசுவநாதம் அவர்கள் தலைமையில் கருத்தரங்கம் நிகழ்ந்தது. தருமையாதீனப் பல்கலைக் கல்லூரிப் பேராசிரியர் புலவர். திரு. இரா. செல்வக்கணபதி எம் ஏ. அவர்கள் "தாயுமானார் வகுத்த வாழ்க்கை" என்ற தலைப்பிலும், பல்கலைக் கல்லூரிப் பேராசிரியை வித்துவான். திருமதி. ப. நீலா எம், ஏ. அவர்கள் "தாயுமானார் போற்றிய சான்றோர்கள்" என்ற தலைப்பிலும், திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி முதல்வர், வித்துவான், திரு. கு. சுந்தரமூர்த்தி எம். ஏ. அவர்கள் "தாயுமானார் சமயம்" என்றதலைப்பிலும் விரிவுரை ஆற்றினார்கள். அன்பர்கள் பலர் கேட்டு மகிழ்ந்தார்கள். பிறகு ஸ்ரீ மௌனகுரு, ஸ்ரீ தாயுமானாருக்கு வழிபாடு நடத்தப்பெற்று வந்திருந்த அன்பர்கட்குப் பிரசாதம் வழங்கப்பெற்றது,

உ

சிவமயம்

# மாசிமாதச் சிறப்பு நாட்கள்

---

13—2—79 செவ்வாய், விருத்தியார்க்கம், விஷ்ணுபதி புண்ணியகாலம், திருவையாறு மாதப்பிறப்பு தீர்த்தம்.

15—2—79 வியாழன், தருமை 17 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ மாணிக்கவாசக தேசிக பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை.

16—2—79 வெள்ளி, எறிபத்த நாயனூர் குருபூஜை.

19—2—79 திங்கள், காளாஷ்டமி.

23—2—79 வெள்ளி, காரிநாயனூர் குருபூஜை.

25—2—79 ஞாயிறு, மகாசிவராத்திரி, மாயூரம் ஸ்ரீ காசி விசுவநாத சுவாமிக்கு மகாபிஷேகம், சீகாழி ஸ்ரீ உமாமகேசுவரருக்கு மூன்ரும் காலத்தில் புழுகாப்பு.

26—2—79 திங்கள், சர்வ அமாவாசை, சோமவார அமாவாசை, அரசப் பிரதட்சிணம், துவாபரயுகாதி, கோச்செங்கட்சோழ நாயனூர் குருபூஜை.

3—3—79 சனி, வேளூர் 19, 20, 21 ஆகியதேதிகளில் சூரியபூஜை, மாசிமக உற்சவாரம்பம்.

4—3—79 ஞாயிறு, கார்த்திகை விரதம், வேளூர்க் கிருத்திகை, தருமை ஸ்ரீ சண்முகருக்கு அபிஷேகம்.

11—3—79 ஞாயிறு, பிரதோஷம், வராககல்பாதி.

12—3—79 திங்கள், மாசிமகம். திருவையாறு, திருக்குவளை, கும்ப கோணம், கஞ்சனூர், காஞ்சிபுரம் முதலிய இடங்களில் மாசி மக தீர்த்தம், திருக்குவளையில் நெல்மகோற்சவம், ஸ்ரீநடராஜர் அபிஷேகம், திருக்கடவூர் ஸ்ரீ காலசம்கார மூர்த்திக்கு அபிஷேகம், வடலூர் ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள் அருட் பெருஞ்சோதி தரிசனம்.

13—3—79 செவ்வாய், பௌர்ணமி விரத பூஜை, மாதபூஜையில் கிருத கம்பளம், சந்திரகிரகணம்.

14—3—79 புதன், மீனரவி 36-39, ஷடசீதி புண்யகாலம், திருவையாறு தீர்த்தம், காரடையான் நோன்பு.



உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

## தருமையாதீனத் திங்கள் இதழ்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திலிருந்து வெளிவருவது. சமய உண்மைப் பொருள் முதலியவற்றைக் குறித்த தெளிவான கட்டுரைகள் அடங்கியது. சைவ சமயத்தின் உண்மைகளை உணர்வதற்குப் பெருந் துணையானது. கையொப்பத் தொகையைக் கீழ்க்கண்ட முக்வரிக்கு அனுப்பி ஞானசம்பந்தம் பெற்றுப் பயனுறவும்.

| | | |
|---|---|---|
| **ஆண்டுச் சந்தா ( உள்நாடு )** | ... | **ரூ. 9—00** |
| **ஆண்டுச் சந்தா ( சிலோன் )** | ... | **ரூ. 11—00** |
| **ஆண்டுச் சந்தா (வெளிநாடு)** | ... | **ரூ. 17—00** |
| **ஆயுள் சந்தா (உள்நாடு)** | ... | **ரூ. 100—00** |
| **ஆயுள் சந்தா (வெளிநாடு)** | ... | **ரூ. 125—00** |

கட்டணம் அனுப்பவேண்டிய முகவரி:—

செயலாளர்,
ஞானசம்பந்தம் செயலகம்,
தருமபுரம், மாயூரம் 609 001
தஞ்சை மாவட்டம்.

---

**குறிப்பு :-** ஞானசம்பந்தம் தவிர பிற தருமையாதீன வெளியீடுகளைப் பெற விரும்புவோர், மேலாளர், ஞானசம்பந்தம் பதிப்பகம் – தருமபுரம். மாயூரம் – 609 001, என்ற முகவரிக்கே தொகை அனுப்பிப் பெறவேண்டும்.

Printed & Published by V. Ramaiah Pillai Manager Dharmapuram Adhinam, at the Gnanasambandam Press, Dharmapuram, Mayuram, 10—2—79.